Regd. No. TN/MS (C) 244 | ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) | Phone; 420212 | 6 பக்கம் விலை 50 காசு
POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO G6-TN-MS(C)P.P. 55

**நாட்டுப்பற்று**

நாடு நலமாகவும், வளமாகவும் இருக்கப் பாடுபடும் செயல்தான் நாட்டுப்பற்றாகும்.




# அண்ணா




**அழகு**

மானமும், அறிவும் மனிதனுக்கு அழகு.

-தந்தை பெரியார்



மலர்: 8 | சென்னை: 3 - 3 - 1984 சனி | வெளியூர்: 4 - 3 - 1984 ஞாயிறு | இதழ்: 137

### அண்ணாவின் ஆட்சியை நடத்தும் முதல்வர் புரட்சித்தலைவரது பொற்கால ஆட்சியின் மற்றொரு நலத்திட்டம்

## நிலமற்ற உழவுதொழிலாளர்கள், சிறுஉழவர்போன்ற நலிந்தோர்க்கு

# புதிய பாதுகாப்புத் திட்டம்

## அண்ணா பிறந்தநாளில் அமுலாகும்

### வறட்சி வெள்ளத்தால் இழப்பு ஏற்படும்போது நஷ்டஈடு
### தொழில்செய்யும்போது உயிரிழந்தவர்களது குடும்பத்திற்கு ரூ. 5 ஆயிரம்முதல்10 ஆயிரம்வரை உதவி

**சென்னை மார்ச் 3- விவசாயப் பெருமக்களின் உண்மையான காவலனாம் முதல்வர் புரட்சித்தலைவர் ஆட்சியில் நிலமற்ற உழவு தொழிலாளர்களுக்கும், சிறு உழவர்களுக்கும் பாதுகாப்புத்தரும வகையில் புதிய பாதுகாப்புத்திட்டம் அறிவிக்கப்பட்டுள்ளது. இத்திட்டம் பேரறிஞர் அண்ணா பிறந்த நாளான செப்டம்பர் 15-ம் தேதி முதல் அமுலாகும்.**

இன்று சட்டப்பேரவையில் தாக்கல் செய்யப்பட்ட நிதிநிலை அறிக்கையில் இது பற்றிய விவரங்கள் அறிவிக்கப்பட்டுள்ளன,

நிதிநிலை அறிக்கையில் இத்திட்டம் பற்றி கூறப்பட்டுள்ளதாவது:-

நிலமற்ற உழவுத் தொழிலாளர்கள் சொற்ப நிலமுள்ள உழவர்கள் போன்ற சமுதாயத்தின் நலனுக்காக உழைக்கும் இந்த பிரிவினர்க்குப் பாதுகாப்பும் காப்புறுதி திட்டத்தின் கீழ் நன்மையும் அளிப்பது அவசியம்

இயற்கைச் சீற்றங்கள் நேரிடும்போது இவர்கள் கையறு நிலையில் அகப்பட்டுத் தவிக்கின்றனர்

மாநில அரசு அவ்வப்போது இவர்களுக்கு அளிக்கும் வேலை வாய்ப்புத் திட்டங்களினாலும் கடன்களைத் திருப்பிச் செலுத்துவதில் இவர்களுக்கு அளிக்கும் சலுகைகளினாலும் ஏற்படக் கூடிய நன்மை, இயற்கைச் சீற்றங்களினால் அறவே பயனற்றுப் போய் விடுகிறது.

இன்றியமையாபொருள்களைப் பொதுப் பங்கீட்டு முறையின் மூலம் பொது மக்களுக்கு அளித்தல், அரிசி போன்றவற்றை குறைந்த விலைக்கு ஏழைகளுக்குக் கிடைக்கும்படிச் செய்தல் முதியோர் ஆதரவற்றோர் ஆகியோருக்கான உதவித் தொகைத் திட்டம் ஆகிய நடவடிக்கைகளையும், சத்துணவுத் திட்டத்தை முதியோர் உதவித் தொகைத் திட்டத்தின் கீழ் வருபவர்களுக்கும் கிடைக்கும்படிச் செய்ய அண்மையில் அறிவிக்கப்பட்ட திட்டம், வேளாண்மைத் தொழிலாளர்களுக்கு வேட்டி, சேலை ஆகியவற்றை அளிக்கும் திட்டம் போன்ற பல்வேறு வகை உதவித் திட்டங்களையும் அரசு செயல்படுத்தி வருகிறது.

இந்த அரசு பதவிஏற்கு முன் தேர்தலின்போது உறுதியளித்தது போல பயிர்க்காப்புறுதி திட்டம் ஏற்கனவே அறிவிக்கப்பட்டுள்ளது.

தற்பொழுது உழவர்களுக்கும்உழவுதொழிலாளர்களுக்கும் வாழ்க்கைக்குப் பாதுகாப்பளிக்கும் இந்தத் திட்டத்தை அரசு வகுத்துள்ளது. இந்த திட்டம் அறிஞர் அண்ணா பிறந்த நாளான செப்டம்பர் 15ஆம் நாளிலிருந்து செயலுக்கு வரும்.

நிலமற்ற உழவுத்

(6-ம்பக்கம்பார்க்க)

### ஃ விற்பனை வரி விகிதங்களில் சீரமைப்பு ஃ பலமுனை விற்பனை வரி விலக்குக்கான வரம்பு ரூ. 1 லட்சமாக உயர்வு
### ஃ 20 ஆயிரம் வணிகர்கள் பயன்பெறும் வகையில் வரிச்சலுகை

## அறிஞர் அண்ணா பிறந்த நாளான செப்டம்பர் 15-ந் தேதியிலிருந்து

## 10லிருந்து 15 வயது வரையிலான மாணவர்களுக்கும்

# சத்துணவு விஸ்தரிப்பு

## மேலும் பல லட்சம் மாணவர்களது பசிப்பிணி போக்க புரட்சித்தலைவர் அரசு அறிவிப்பு

### கூடுதலாக ரூ. 20 கோடி செலவு

**சென்னை, மார்ச், 3 அனைவராலும் புகழ்ந்து பாராட்டப்படும் குழந்தைகள் சத்துணவுத் திட்டம், பேரறிஞர் அண்ணா பிறந்தநாளான செப்டம்பர் 15ந் தேதி முதல் 15 வயது வரையிலான மாணவர்-மாணவிகளுக்கும் விஸ்தரிக்கப்படுகிறது.**

தமிழக சட்டசபையில் 84-85ம் ஆண்டிற்கான நிதிநிலை அறிக்கையை நிதியமைச்சர் டாக்டர் நாவலர் தாக்கல் செய்தார். வரவு-செலவு குறித்தும் புதிய திட்டங்கள் குறித்தும் நிதிநிலை அறிக்கையில் சொல்லப்பட்டிருப்பதாவது:—

1983—84 ஆம் ஆண்டு வரவு-செலவுத் திட்டத்தில் திட்டங்களுக்கும், திட்டத்தில் சேராதத் திட்டங்களுக்கும் இயன்ற அளவு நிதி ஒதுக்கம் செய்யப்பட்டது. இருந்த போதிலும், செலவைச் சிக்கனப்படுத்த எல்லா முயற்சிகளையும் மேற்கொண்ட போதிலும் நடப்பாண்டில் வருவாய்க்கணக்கில்சுமார் ரூ. 200 கோடி கூடுதல் செலவு ஏற்படலாம் என்பது திருத்த மதிப்பீட்டிலிருந்து தெரியவருகிறது

கிருஷ்ணா நதிநீர் திட்டத்திற்காக ரூ. 30 கோடியும், வறட்சி நிவாரணத்திற்காக ரூ. 55 முதல் ரூ. 60 கோடியும், தமிழ்நாடு நுகர் பொருள் வாணிபக் கழகத்திற்கு உதவித் தொகை வழங்க ரூ 30 கோடியும் ஒதுக்கியதே இக்கூடுதல் செலவிற்கு முக்கிய காரணமாகும்.

இதைத்தவிர மைய அரசுத் திட்டங்களின் காரணமாகவும் மற்ற திட்டச் செலவுகள் பெருகியதன்மூலமாகவும் இந்த பெருக்கம் ஏற்பட்டுள்ளது.

சென்ற ஆண்டுக்குரிய வரவு-செலவுத் திட்டத்துடன் கொடுக்கப்பட்ட 1982-83 திருத்த மதிப்பீட்டில் இறுதிப் பற்றாக்குறை ரூ. 89. 02 கோடியாக இருக்கும் என்று எதிர்பார்க்கப்பட்டது.

எனினும் 1982-83 ஆம் ஆண்டுக்குரிய இறுதிப் பற்றாக்குறை ரூ 4.04 கோடியாகவே அமைந்தது.

1983-84ஆம் ஆண்டுக்கான திருத்த மதிப்பீட்டில் வருவாய்க் கணக்கில் வரவுகள் ரூ 1,892.86 கோடியாக இருக்குமென்று மதிப்பிடப்பட்டுள்ளது. வருவாய்க் கணக்கில் வரவினம் இவ்வாறிருக்க, வருவாய்க் கணக்கில் செலவுரூ.1869. 33 கோடியாக இருக்குமென்று கணக்கிடப்பட்டுள்ளது.

இவ்வாறாக வருவாய்க் கணக்கில் ரூ 23.53 கோடி உபரிஇருக்குமென்றுமதிப்பிடப்படுகிறது. மூலதனக் கணக்கில் செலவு ரூ 186.32 கோடியாகும்,

பொதுக் கடன் என்பதன் கீழ் ரூ 148.03 கோடி உபரியாக இருக்குமென்றும் கடன் செலவின் கீழ் நிகரப்பற்றாக்குறை ரூ. 233. 86 கோடியாக இருக்குமென்றும் மதிப்பிடப்பட்டுள்ளது.

மேற்குறிப்பிடப்பட்ட கணக்கின்படி தொகு நிதியின் கீழ் ரூ. 248. 62 கோடி பற்றாக்குறை இருக்கும். அதே சமயத்தில் பொதுக்கணக்கின் கீழ் ரூ, 123.35 கோடி உபரி எதிர்பார்க்கப்படுகிறது.

இதனால் மொத்தப்பற்றாக்குறைரூ,125.27கோடியாகக் குறையும் தொடக்கப் பற்றாக்குறையான ரூ 4.04 கோடியையும் கணக்கில் எடுத்துக் கொண்டால், நடப்பாண்டுக்கான இறுதிப் பற்றாக்குறைரூ 129.31 கோடியாக இருக்கும்.

1984-85ஆம் ஆண்டிற்கான வரவு-செலவுத் திட்டத்தின்படி, வருவாய்க் கணக்கில் வரவு ரூ.2065.43கோடியாகும்.

வருவாய்க்கணக்கில் செலவு ரூ, 1946.33 கோடியாகும். இதன்படி வருவாய்க் கணக்கில் ரூ119.05கோடி உபரி இருக்கும். மூலதனச் செலவு ரூ 178.43 கோடியாக இருக்கு மென்றும், பொதுக்கடன் என்பதன் கீழ் நிகர உபரி ரூ 145.76 கோடியாக இருக்குமென்றும் எதிர்பார்க்கப்படுகிறது.

கடன்கள்-முன்பணங்கள் என்பதன் கீழ் நிகரமாக ரூ. 272. 92 கோடி பற்றாக்குறைஇருக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

மொத்தத்தில் தொகு நிதியில் ரூ. 186.54கோடி பற்றாக்குறை இருக்கும். பொதுக்கணக்கில்ரூ 114.35 கோடி உபரி இருக்கலாம் 1984-85 வரவு செலவுத் திட்டத்தின் படிக்கான ரூ. 72.19 கோடி பற்றாக் குறையையும் தொடக்கப் பற்றாக்குறையான ரூ. 129.31 கோடியையும் கணக்கில்எடுத்துக்கொண்டால்அடுத்தநிதி ஆண்டுக்கான இறுதிப் பற்றாக் குறை ரூ. 201.50 கோடியாக இருக்கும்.

மாநில அரசின் வருவாய்க்கும் செலவினங்களுக்கும் இடையே பெரிய அளவில் பற்றாக்குறை

(6ம் பக்கம் பார்க்க)

ஃ பெருகக்கூடிய நிதி ஆதாரங்கள் மத்திய அரசிடம் பெருமளவு உள்ளன

ஃ இயற்கையின்சீற்றம்ஏற்படுகிறபோது மாநில திட்ட மதிப்பீடுகள் நிலைகுலைவு

## ஆட்சிப்பணிகள் செம்மையாக நடக்க

# வலிவான இந்தியா-வளமான மாநிலங்கள்

### கூட்டாட்சி தன்மையில் தன்னாட்சி மாநிலமாக தமிழகம் திகழவேண்டும்

**சென்னை, மார்ச் 3- ஆட்சிப்பணிகள் செம்மையாக நடக்க வலிவான இந்தியா- வளமான மாநிலங்கள் அமையவேண்டும் கூட்டாட்சி தன்மையில் தன்னாட்சி மாநிலமாக தமிழகம் திகழவேண்டும் என்று நிதிநிலை அறிக்கையில் நிதியமைச்சர் டாக்டர் நாவலர் தெரிவித்தார்.**

நிதிஅமைச்சர் டாக்டர் நாவலர் தாக்கல் செய்த நிதி நிலை அறிக்கையில் இது பற்றி கூறப்பட்டு இருப்பதாவது:

நிவாரணப் பணிகளை நிறைவேற்றுவதற்கான நிதி வாயில்கள்தேவையான அளவிற்கு மாநில அரசுக்குகிடைப்பதில்லை.

பெருகக் கூடிய நிதி வாயில்கள் மத்தியஅரசிடம் பெருமளவு உள்ளன.

மேலும், பொதுமக்கள் வங்கிகள் ஆகியோரிடமிருந்து கடன் திரட்டும் வாய்ப்புகள் ஆயத்தீர்வைகள், சுங்கத் தீர்வைகள், கூட்டு நிறுவன வரி ஆகியவற்றை வசூலிக்கும் வாய்ப்பு, வெளிநாடுகளிலிருந்து கடன் பெறும் வாய்ப்பு போன்ற வசதிகள், மத்திய அரசுக்கு உள்ளன.

ஆனால் மாநில அரசின் நிதி வாயில்களோ மிகவும் குறைந்தவையாகும். வணிக வரிகள், ஆயத்தீர்வைகள் ஆகியவற்றிலிருந்து மட்டுமே மாநில அரசுக்கு வருவாய் கிடைக்க வாய்ப்புள்ளது.

முக்கியமான வளர்ச்சிப் பொறுப்புகளை நிறைவேற்றும் போக்குவரத்துக் கழகங்கள்மாநிலமின்வாரியம் போன்ற மாநில அரசு நிறுவனங்கள் கூட மத்திய அரசு அடிக்கடி அறிவிக்கும் பொருள் விலையேற்றங்களினால் அவ்வப்பொழுது நிதிப் பற்றாக்குறைக்கு உள்ளாகின்றன.

கடந்தஐந்துஐந்தாண்டு திட்டங்களின் கீழ் செயலாக்கப்பட்டு வந்த திட்டங்கள், தற்போது திட்டத்திற்குப் புறம்பாகச் செயலாக்கப்படுவதால், திட்டத்தில் சேராத செலவு பெருகிக் கொண்டே போகிறது.

மாநிலத்திட்டங்களுக்கு மத்திய அரசு 20 சதவீதமே உதவித்தொகை அளிக்கிறது. இச்சதவீதமும் முதல் திட்டதிலிருந்துகுறைந்துகொண்டே வருவது கவலை அளிக்கிறது.

### மிகைப்பற்று வாங்கும் சூழ்நிலை ஏன்?

இத்தகையசூழ்நிலையில் இயற்கைச் சீற்றங்களின் காரணமாகவோ, திடீரென ஏற்படும் நிதிப் பொறுப்புகளின் காரணமாகவோ மாநிலஅரசுக்கு ஏற்படும் கூடுதல் செலவினால், மாநில அரசின் வரவு-செலவுத் திட்ட மதிப்பீடுகளே குலைந்துவிடும் நிலை உருவாகிறது.

மக்களுக்கு ஆற்றவேண்டிய கடமைகளை மாநில அரசுபுறக்கணிக்கமுடியாது. அதே நேரத்தில் ஏராளமான வளர்ச்சித் திட்டங்களையும், மக்கள் நலன் தொடர்பான திட்டங்களையும், மாநிலஅரசு நிறைவேற்ற வேண்டியுள்ளது.

மேற்கூறிய காரணங்களினால் மிகைப்பற்று வாங்க வேண்டிய ஒரு கட்

இக்கண்ணோட்டத்துடன் இம்மாநிலத்தின் நிலையை பரிவுடனும், உண்மையான நிலையை உணர்ந்து கொள்ளும் எண்ணத்துடனும் மத்திய அரசு கவனித்து, இம் மாநில அரசு தற்காலிகமாக எதிர்நோக்கி இருக்கும் நிதிப் பற்றாக்குறையைச் சமாளிக்க உதவியளிக்கும் என்று எதிர்பார்க்கிறோம்.

### வளமான மாநிலம் தேவை

ஆட்சிப்பணிகள் செம்மையாக நடைபெற, "வலிவான இந்தியாவும் வளமான மாநிலங்களும்" அமைய வேண்டும். இந்த கொள்கையைத்தான், இந்த அரசு தொடர்ந்து வலியுறுத்தி வருகிறது.

இந்தியாவை எல்லா வகைகளிலும் பாதுகாக்கின்ற பொறுப்பு மைய அரசையும், மக்களை எல்லா நிலைகளிலும் வாழவைக்கின்ற பொறுப்பு, மாநில அரசுகளையும் சார்ந்தனவாக ஆகின்றன.

கூட்டாட்சித் தன்மைக் கொண்ட வலிவான இந்தியாவில், தேவையான, நியாயமான, மிகவான அதிகாரங்கள் கொண்ட தன்னாட்சி மாநிலங்கள் நிலவ வேண்டும்.

### அண்ணா கருத்து

இந்த அடிப்படையில் இந்தியக் கூட்டாட்சியில் மிகவான அதிகாரங்கள் கொண்ட தன்னாட்சி மாநிலமாகத் தமிழ்நாடு திகழவேண்டும் என்பதைத்தான் பேரறிஞர்அண்ணா அவர்கள் காட்டிய நெறிமுறையில் நின்று முதல்வர் அவர்கள் அடிக்கடி வற்புறுத்தி வருகிறார்

மைய-மாநில அரசுகளின் உறவு நிலையும், உரிமை நிலையும் வரையறுக்கப்பட வேண்டும் என்பதை வலியுறுத்தி வந்த அறிஞர் அண்ணா அவர்கள், 'மைய அரசிடமிருக்கும் அதிகாரங்கள் பலவும் மாநில அரசுகளுக்கு நியாயத்தின் அடிப்படையில் பகிர்ந்து அளிக்கப்படவேண்டும்.

அப்படி அதிகாரங்கள் பகிர்ந்தளிக்கப்பட, அரசமைப்புச் சட்டம் தேவையான அளவுக்குத் திருத்தப்படவேண்டும். அரசமைப்புச் சட்டத்தைத் திருத்துவதற்கு ஏற்ற நேரமும், நிலையும், நினைப்பும் இப்பொழுது ஏற்பட்டிருக்கின்றன

அரசமைப்பு சட்டத்தை அலசி ஆராய்ந்து, திருத்துவதற்குச் சட்டத்தின் மூலம் வாய்ப்பளிக்க வேண்டும் திருத்தப்பட வேண்டும் என்று வற்புறுத்துவதற்குச் காரணமே, அதிகாரங்கள்

மாநிலங்களுக்குப் பகிர்ந்தளிக்கப்பட வேண்டும்" என்பதற்காகத் தான் என்று தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார்கள்.

மைய-மாநில அரசுகளின் உறவுகளையும், உரிமைகளையும் ஆராய்ந்தறிந்து பரிந்துரை செய்வதற்காக மையஅரசு நீதிபதி சர்க்காரியா குழுவை அமைத்திருப்பதை இந்த அரசு வரவேற்பதோடு, அந்தக் குழு உண்மையான மையக் கூட்டாட்சியும், மாநிலத் தன்னாட்சியும் அமைய, வழிவகுத்து தரவேண்டும் என்று வற்புறுத்துகிறது.

இன்றைய சூழ்நிலையில் மைய—மாநில அரசின் உறவு நிலைகளும் உரிமை

6-ம் பத்தி பார்க்க

## 67-பக்க நிதி நிலை அறிக்கை

சென்னை, மார்ச். 3— தமிழக சட்டசபைக் கூட்டம் இன்று காலை தொடங்கியது. 1984-85ம் ஆண்டிற்கான நிதிநிலை அறிக்கையை தாக்கல் செய்ய நிதியமைச்சர் டாக்டர்நாவலர் முதல்வர் புரட்சித் தலைவருடன் ஒன்றாக 10-50 மணிக்கு சபைக்குவந்தார் 11.03க்கு நிதிநிலை அறிக்கையை படிக்கத் தொடங்கிய அமைச்சர் டாக்டர் நாவலர் 12-36க்கு 67 பக்கங்கள்கொண்ட அறிக்கையை படித்து முடித்தார்.

5-ம் பத்தி தொடர்ச்சி

முதல் கட்டப்பணி முடிக்கப்பட்டுள்ளது.

இந்த ஆய்வு, நிலத்தடி நீர்வளத்திற்கு கூடுதல் வாயில்கள் இருப்பதைக் கண்டறிந்து முக்கியமான கருத்துக்களை அளித்துள்ளது.

செயற்கைமுறை மறுச்செறிவு, நீர் பயன்பாட்டைச் சிக்கனமாகச் சீரமைத்தல் தொடர்பாக, தொழில்நுட்ப வாய்ப்புஇருப்பதையும் அது புலப்படுத்தியுள்ளது.

ஆறுகளுக்குக் குறுக்கே, தக்க இடங்களில் தடுப்பு அணைகள் கட்டுவதன் மூலம் ஆறுகளின் உபரிநீர் கடலில் கலந்து விடுவதைக் குறைக்க முடியும். இத்திட்டத்தின் இரண்டாம் கட்டப் பணி 1984-85முதல் தொடங்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

இந்த ஆய்விற்கு ஐக்கிய நாடுகள் வளர்ச்சித் திட்ட அமைப்பு ரூ. 1 கோடிக்கும் மேல் உதவி வழங்கியுள்ளது. தமிழ்நாடு அரசும் அதற்கிணையாக தன் பங்கிற்கு நிதி ஒதுக்கி வருகிறது. இம் மாநிலத்தில் நிலவும்கடும் தண்ணீர் பற்றாக்குறையைக் கருத்தில் கொண்டு இயன்ற இடங்களிலெல்லாம் பெருமளவிற்கு மழை நீரைத் தேக்கி வைக்க முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

இவ்வாறு டாக்டர் நாவலர் தெரிவித்துள்ளார்.

### கிருஷ்ணா நதி நீர் திட்டத்திற்கு ரூ. 60 கோடி ஒதுக்கீடு

# 75 நகரங்கள் 740 சிற்றூர்களுக்கு ரூ.150கோடியில்திட்டம்

### குடிநீர் திட்டங்கள் குறித்து நிதி நிலை அறிக்கையில் டாக்டர் நாவலர் அறிவிப்பு

**சென்னை மார்ச். 3- கோவை, சேலம், மதுரை உட்பட 75 நகரங்கள், 740 சிற்றூர்களுக்கு குடிநீர் வழங்க ரூ. 149 42 கோடியில் ஒருதிட்டம் தயாரிக்கப்பட்டுள்ளது- வரும் ஆண்டுக்கு கிருஷ்ணாநதி நீர்திட்டத்திற்கு ரூ 60 கோடி செலவிட வகை செய்யப்பட்டுள்ளது என்று நிதிஅமைச்சர் டாக்டர் நாவலர் கூறினார்.**

தமிழக அரசின் நிதி நிலை அறிக்கையில் இது குறித்து தெரிவிக்கப்பட்டுள்ளதாவது:-

மக்களுக்குக் குடிநீர் வழங்கும் திட்டத்திற்கு அரசு மிகவும் முக்கியத்துவம் அளித்துள்ளது. ஆறாவது ஐந்தாண்டுத்திட்டத்தின் முதல் மூன்று ஆண்டுகளில குடிநீர் பற்றாக்குறை நிலவிய 10,244 சிற்றூர்களுக்குக் குடிநீர் வழங்க ரூ. 77.73 கோடி செலவிடப்பட்டது.

நடப்பு ஆண்டில் மேற்கொண்டும் 2,465கிராமங்களுக்குக் குடிநீர் வழங்கப்பட்டது. 1982-83, 1983 84ஆம் ஆண்டுகளில், வறட்சிநிவாரணப் பணிகளின்கீழ் 22,000 குழாய்க் கிணறுகள் ரூ. 46. கோடி செலவில் அமைக்கப்பட்டன.

சென்னை குடிநீர் வழங்கல் கழிவுநீர் அகற்று வாரியம் 1984-85ஆம் ஆண்டில்சென்னை மாநகரில் ரூ. 15.25 கோடி செலவில் நீர் வழங்கு திட்டங்களையும் கழிவுநீர் அகற்றுத் திட்டங்களையும் மேற்கொள்ளவிருக்கிறது

### கிருஷ்ணாநதி நீர் திட்டம்

கிருஷ்ணாநதிநீர்வழங்கு திட்டப்பணி முன்னேறி வருகிறது. 1984—85ஆம் ஆண்டுக்குரிய வரவு செலவுத் திட்டத்தில், இப்பணிக்காகரூ 60 கோடி செலவிட வகை செய்யப்பட்டுள்ளது.

கோயம்புத்தூர், சேலம், மதுரை ஆகிய மூன்று பெரிய நகரங்களுக்கும் ஏனைய 75 நகரங்களுக்கும் 740 சிற்றூர் களுக்கும் குடிநீர் வழங்க வகை செய்யும் திட்டம் ஒன்றுக்கு, உலகவங்கியின் உதவியைப் பெற பேச்சுவார்த்தைகள் முடிந்துவிட்டன.

14 நகராட்சிகளில் முன்னோடித் திட்டமாகக் குறைந்த செலவில் துப்புரவு வசதிகள் செய்து கொடுக்கவும் இத்திட்டம் வகை செய்கிறது 1984-85ம் ஆண்டிற்காக இத்திட்டத்தின்கீழ் ரூ 8கோடி ஒதுக்கப்பட்டுள்ளது.

நீர் வள மண்ணியல் செயற்கை முறை மறுச்செறிவு தொடர்பான ஆய்வைத் திட்டப்பணியாக கருதி நடத்துவது குறித்ததிட்டத்தை இவ்வரசு ஐக்கிய நாடுகள் வளர்ச்சித் திட்டத்தின் நிதியுதவியுடன் செயல்படுத்தி வருகிறது. 1981 ஆம் ஆண்டில்தொடங்கப்பட்ட இத்திட்டத்தின்

### சென்னையில் போலீஸ் தடை உத்திரவு

சென்னை, மார்ச். 3— சென்னையில் இன்று முதல் (3-ந்தேதி) வரும் 18 ந் தேதிவரை போலீஸ் தடைஉத்திரவு பிறப்பிக்கப்பட்டுள்ளது. இந்நாட்களில் போலீசார்அனுமதியின்றி ஊர்வலங்களோ, பொதுக் கூட்டங்களோ நடத்தக்கூடாது என்று சென்னை நகர போலீஸ் கமிஷனர் ஸ்ரீபால் தெரிவித்துள்ளார்.

(3-ம் பத்தி தொடர்ச்சி)

நிலைகளும் எப்படி அமைய வேண்டும் என்பதைத் தமிழக அரசின் சார்பாக எடுத்துக் காட்டுவதற்கான கொள்கையை வகுக்க நீதிபதி ராமபிரசாத் ராவ் குழு தமிழக அரசால் அமைக்கப்பட்டுள்ளது.

### கூட்டாட்சியின் தத்துவம்

அரசியல் அறிஞரான கே. சி. வியர் என்பார் 'கூட்டாட்சி முறை அரசு' என்னும் நூலில், மைய அரசும், மாநில அரசுகளும் தங்கள் ஆதிக்கத்திற்கு உட்பட்டவைகளில் கூட்டாகவும்-ஆனால் சுதந்திரமாகவும் இயங்கும் வகையில் அதிகாரங்களை பிரித்துக்கொள்ளும் முறைதான் கூட்டாட்சி முறைத் தத்துவமாகும் என்பது நான் கருதுவதாகும். மைய அரசும், மாநில அரசுகளும் தங்கள் தங்களது வரையறுக்கப்பட்ட ஆட்சி எல்லைக்குள் அமைந்திருப்பவை; தங்கள் தங்கள் அதிகாரங்களைப் பொறுத்துச் சுதந்திரமானவை, ஒன்றுக்குஒன்று கீழ்ப்படிந்து நடக்கவேண்டியவை அல்ல' என்றுகுறிப்பிட்டிருப்பது கூர்ந்து கவனிக்கத்தக்கதாகும்.

இவ்வாறு டாக்டர்

### முதல்வர் புரட்சித்தலைவர் ஆட்சியில் 1983-ம் ஆண்டில்

# 1.5 [illegible] லட்சம் வீட்டு மனைகள் வழங்கப்பட்டன

### நிதி நிலை அறிக்கையில் டாக்டர் நாவலர் தகவல்

**சென்னை, மார்ச். 3- கழக ஆட்சியில் 1983ம் ஆண்டு டிசம்பர்வரை 1 லட்சத்து 49 ஆயிரத்து 413 பேர்களுக்கு வீட்டுமனைப் பட்டாக்கள் வழங்கப்பட்டுள்ளன. இதில் 73,224 பேர் ஆதிதிராவிடர்கள் என்றும் நிதி நிலை அறிக்கையில் டாக்டர்நாவலர் கூறினார்.**

தமிழக அரசின் நிதி நிலை அறிக்கையில் இது பற்றி தெரிவிக்கப்பட்டுள்ளதாவது:-

நடப்பு நிதி ஆண்டில் 1983 டிசம்பர் வரையில் 9029 42 ஏக்கர் பரப்பளவுள்ள சாகுபடி நிலங்கள் நிலமற்ற ஏழைகளுக்குக் கொடுக்கப்பட்டன. இதே காலஅளவில்149,413வீட்டு மனைகள் வழங்கப்பட்டன. இவற்றில் 73,224 மனைகள் ஆதிதிராவிடர்களுக்கும் 3,767 மனைகள் பழங்குடியினருக்கும் 72,422 மனைகள் ஏனையோருக்கும் வழங்கப்பட்டன.

வருவாய் ஆய்வாளருக்கு அலுவலகங்கள்-குடியிருப்புகள் அளிக்கும் திட்டத்தின் கீழ், 958 குடியிருப்புகள் கட்ட அரசு அனுமதி வழங்கியுள்ளது. இதுவரை 609 குடியிருப்புகளுக்கான கட்டிடங்கள் கட்டி முடிக்கப்பட்டு விட்டன. ஏனைய கட்டிடங்கள் பல்வேறு நிலைகளில் உள்ளன. வட்டாட்சியர் அலுவலகங்கள், கோட்டாட்சி அலுவலகங்கள் சிலவற்றுக்காக, 1984-85ல் புதிய கட்டி

ஆண்டு வேளாண்மைநிலக் குத்தகை உரிமைப் பதிவேடுகள் சட்டத்தின்கீழ் 1983 ஆம் ஆண்டுநவம்பர் திங்கள் 30 ஆம் நாளன்று உள்ளவாறு 439,464 குத்தகைக்காரர்கள் பதிவு செய்யப்பட்டுள்ளனர்.

### ஆலோசனை குழுக்கள்

இந் நிலங்களின் மொத்தப் பரப்பளவு 636,813 ஏக்கர் ஆகும்.

பதிவேட்டு அலுவலருக்கு உதவுவதற்காக வட்ட அளவில் அலுவல் சார்பற்ற ஆலோசனைக் குழுக்களை அரசு அமைத்துள்ளது.

### மத்திய அரசு திட்டம்

உபரி நில ஒப்படைதாரர்களுக்கு நிதி உதவி அளிக்கும் மத்திய அரசுத் திட்டத்தின் கீழ் 1983-84 ஆம் ஆண்டுக்கு ஒதுக்கப்பட்ட ரூ.10 லட்சத்தில் 1983ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் 31 ஆம் நாளன்று

காவலர்களுக்கான அத்தியாவசிய பொருட்கள்

# மான்ய அளவை பெருக்க திட்டம்

சென்னை, மார்ச், 3— காவலர்களுக்கு வழங்கப்பட்டு வரும் இன்றியமையாத பொருள்களில் மான்ய அளவைப் பெருக் கருதப்பட்டுள்ளதாக நிதி நிலை அறிக்கையில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

இது பற்றி கூறப்பட்டு இருப்பதாவது:-

நடப்பு நிதி ஆண்டில், சட்டம்.ஒழுங்கு நிலைமை நல்ல முறையில், மன நிறைவளிப்பதாக உள்ளது காவல் துறையின் செயல் திறனுக்கு இது ஒரு எடுத்துக்காட்டாகும்.

காவல்துறையை நவீனமயமாக்கவும், வலுபடுத்தவும், காவலர்களின் நலனைப் பேணிக்காக்கவும் மாநில அரசு, பல்வேறு நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளது. காவலர்களின் நலத் திட்டத்தின் கீழ் ரூ. 1 கோடி ஒதுக்கப்பட்டு அவர்களுக்கு மலிவு விலையில் அளிக்கப்பட்டுவரும் இன்றியமையாப் பொருட்களான அரிசி, எண்ணெய், கோதுமை சர்க்கரை முதலியவற்றின் மான்ய அளவைப் பெருக்கக் கருதப்பட்டுள்ளது.

அவர்களுக்கு சீருடை, துணிகள் வழங்குவதற்காக ரூ 62.50 லட்சம்நிதி ஒதுக்கம் செய்யப்பட்டுள்ளது.

மீ. உயர் அலைக்கோபுரங்கள் அமைப்பது, மீ. உயர் அலைச் சாதனங்கள் வாங்குவது ஆகியவற்றின் மூலம் காவல் துறையின் தகவல் போக்குவரத்து வசதி மேம்படுத்தப்படும். இத்துடன் வழக்கமான பணிகளும், குடியிருப்புக்கட்டிடங்கள் அலுவலகங்கள் கட்டுதல் தொடர்பான பணிகளும்மேற்கொள்ளப்படும்.

நீதிமன்றங்களில் உள்ள வழககுகளைத் துரிதமாக விசாரித்துத்தீர்ப்பு வழங்க அரசு புதிய நீதி மன்றங்கள் ஏற்படுத்தவும் கருதியுள்ளது.

இவ்வாறு நிதி நிலை அறிக்கையில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

வானொலியில்

## அமைச்சர் கோவேந்தன் பேசுகிறார்

சென்னை, மார்ச் 3— சென்னை வானொலியில் நாளை (4ந்தேதி) மாலை 6-20 மணிக்கு பிற்பட்டோர் நலம் குறித்த பொருள்பற்றி அமைச்சர் கோவேந்தன்உரையாற்றுகிறார்.

(6-ம் பத்தி தொடர்ச்சி)

படும். இதற்கு 2 லட்சம் ரூபாய் செலவாகும் என்று மதிப்பிடப்பட்டுள்ளது இதுபோல மற்றொரு திட்டம் பற்றியும் அரசு பரிசீலித்து வருகிறது.

தேசிய வங்கிகளுக்கான தேர்வுகள், மத்திய அரசு ஊழியர்களுக்கான தேர்வுகளை எழுத பிற்பட்ட வகுப்பைச் சேர்ந்த மாணவர்களுக்கு பயிற்சி அளிக்கவும் ஆலோசிக்கப்பட்டு வருகிறது.

600 பிற்பட்ட மாணவர்களுக்குஇந்தவகையில்3மாத பயிற்சி அளிக்கப்படும். இதற்கு 7 லட்சம் ரூபாய் செலவாகும்.

இவ்வாறு அமைச்சர் கோவேந்தன் கூறினார்.

PUBLISHED BY K.RAVINDRAN ON BEHALF OF THANGAMANI PUBLICATIONS AND PRINTED BY HIM AT ALL INDIA ANNA D. M. K. PERARIGNAR ANNA TRUST PRESS AT 34, NELSON MANICKAM ROAD MADRAS-600 029. Editor: E.PARASURAMAN

"என் கடன் பணி செய்வதே":

குழந்தைகள் சத்துணவுத் திட்டம்

# அன்னை தெரசாவே பாராட்டிய பின் யார் எதைகூறினாலும் பரவாயில்லை

## சென்னையில் நடந்த பாராட்டு விழாவில் முதல்வர் புரட்சித்தலைவர் முழக்கம்

சென்னை, மார்ச். 3- குழந்தைகள் சத்துணவுத் திட்டத்தை அன்னை தெரசா பாராட்டியுள்ளார்: அன்னை தெரசாவே பாராட்டிய பின் யார் எதைச் சொன்னாலும் பரவாயில்லை. என் கடன் பணி செய்து கிடப்பதே என்பதை அடக்கத்தோடு தெரிவித்துக் கொள்கிறேன்.'' என முதல்வர் புரட்சித்தலைவர் அன்னை தெரசாவுக்கு நடந்த பாராட்டு விழாவில் பேசுகையில் கூறினார்.

நோபல் பரிசுபெற்ற அன்னை தெரசாவுக்கு வரவேற்பு அளிக்கும்விழா வள்ளுவர் கோட்டத்தில் நடந்தது இந்தவிழாவுக்கு மத்தியகப்பல்மற்றும்போக்குவரத்து அமைச்சர் விஜய பாஸ்கர ரெட்டி தலைமை வகித்தார்.

சபாநாயகர் ராசாராம் வரவேற்புரைஆற்றினார். விழாவில் அன்னை தெரசாவை வாழ்த்தி முதல்வர் புரட்சித் தலைவர், மேலவைத் தலைவர் ம. பொ. சி. நிதிஅமைச்சர் நாவலர் ஜோதி வெங்கடாசலம், திருமதி பாதர் சையீத் ஆகியோர் பேசினர்.

முன்னதாக திருப்பனந்தாள் பாலசுப்பிரமணியன் குழுவினரின் நாதஸ்வர இசைக் கச்சேரியும் 600க்கும் மேற்பட்ட பள்ளிக் குழந்தைகளுடன் எம்பி. சீனிவாசன் குழுவினர்பாடிய இசை நிகழ்ச்சியும் நடைபெற்றது.

விழாவில் முதல்வர் புரட்சித்தலைவர்பேசுகையில் கூறியதாவது:-

என்னுடைய வாழ்க்கையைப்பற்றிய புத்தகத்தை என்னைப் பெறாத அன்னை தெரசா வெளியிட்டிருக்கிறார்கள்.

அந்த புத்தகத்தில் என்ன உள்ளது என்பது எனக்குத் தெரியாது. படித்தால்தான் தெரியும். ஜெகத்ரட்சகன் இளமைக் காலம் முதலே என்னை ஓரளவு அறிந்ததோடு என்னைப் பின்பற்றுவதால் தவறாக எதுவும் இருக்காது என எண்ணி வாழ்த்துகிறேன். பாராட்டுகிறேன்.

### வாழ்க்கை வரலாறு

நானே என்னுடைய வாழ்க்கை வரலாறை வெளியிட வேண்டும்என்ற முடிவுக்கு வந்திருக்கிறேன் என்னுடைய வாழ்க்கை வரலாற்றுத் தொகுப்பை திரைப்படமாகவும் எடுத்து வெளியிட முடிவு செய்துள்ளேன். அன்னை தெரசா இன்று கூறிய கருத்துக்கள் ஒரு மதத்துக்கு மட்டும் சொந்தமானவை அல்ல எல்லோருக்கும் பொதுவானவை.

ஏழையின்சிரிப்பில்இறைவனைக் காண்பேன் என்றார்அமரர் அண்ணா. சத்துணவுத் திட்டத்திற்கு அது அடிப்படை, கொடைக்கானலில்அன்னை தெரசா பல்கலைக்கழக தொடக்க விழாவில் பேசும்போது சத்துணவுத் திட்டத்தைப் பாராட்டி அதை அனைத்து மாநிலங்களும் பின்பற்றவேண்டும் என்று கூறினார்.

### உன்னதநிலை அதுதான்

அதை இங்கு சொல்லும்போது எனக்கு நிம்மதி ஏற்படுகிறது. நான் அவருடன் பேசிக் கொண்டிருக்கும் போது அவர் ஒரு கருத்தைச் சொன்னார். வாழும்போதுஅமைதியாக வாழவேண்டும். சாகும் போது அச்சமின்றிஇருக்க வேண்டும். அதுதான் உன்னத நிலை என்றார்.

நான் எதை செய்தாலும் குற்றம் காண்பதிலேயே சிலர் உள்ளனர். சில சமயங்களில்நான் கூட இதை செய்து விட்டு ஏன்கெட்ட பெயர் வாங்க வேண்டும். என்று நினைப்பதுண்டு.

இன்று முதல் அது இல்லை. அன்னை

தெரசாவே பாராட்டிய பின் யார் எதைச் சொன்னாலும் பரவாயில்லை. என் கடன் பணி செய்து கிடப்பதே என்பதை அடக்கத்தோடும் அமைதியோடும் கூறிக்கொள்கிறேன்.

அண்ணாவின் கொள்கை எவ்வளவுசிறந்ததுஎன்பதை இப்போதாவது சிலர் உணர்வார்கள் என்று நினைக்கிறேன். அன்னை தெரசா இருக்கும்போது இங்கு எதுவும் தவறாகப் பேசக்கூடாது. என் வாழ்க்கையில் அறிவு தெரிந்த பருவம் முதல் இன்றுவரை போராட்டமாகவே இருக்கிறது. நான் வெற்றி பெறுவேனா என்பது என்னோடு ஒத்துழைப்பவர்களையும், ஆசி கூறுபவர்களையும் பொறுத்து இருக்கிறது நான்போராட்டகளத்தில் நிற்கும் நிலை தான்.

பணத்தை சேர்த்து வைப்பது எப்போதும் பாதுகாப்பாக இருக்கும் என்று கூற முடியாது. ஓரளவு சேர்த்து வைப்பது பாதுகாப்பாக இருக்கும். ஒரேயடியாக சேர்ப்பது நல்லதல்ல, இதை எடுத்துக் காட்டும் வகையில் பலர் அன்னை தெரசாவிடம்நன்கொடைவழங்கினார்கள். கலைவாணர் தொடங்கிவைத்த பணி இன்றுதொடர்கிறதுதனக்கு இல்லாவிட்டாலும் பிறர்க்கு பயன்படட்டும் என்று எண்ணியவர் கலைவாணர்.

நான் உதவி செய்கிறேன் என்றால் அதற்கு வறுமையை அனுபவித்தது மட்டும் காரணம் அல்ல, என்னுடைய கொடுக்கும் மனத்துக்கு கலைவாணரே காரணம். எப்படி வாழவேண்டும் என்பதை கற்றுத்தந்தவர் அண்ணா.

''பிறருக்காக வாழ்வது மாந்தர் கடமை'' என்று விவேகானந்தர் கூறினார். அன்னை தெரசாவும் அதை சொல்கிறார்.

நான் அவருடன் பேசிக் கொண்டிருந்தபோது ஒன்றைச் சொன்னார். அன்னை தெரசா பசியோடு இருந்த ஒரு குழந்தைக்கு ரொட்டித் துண்டு ஒன்றைக் கொடுத்தாராம்.

### நல்ல திட்டம்

ஆனால் அந்த குழந்தை அதை சாப்பிடாது தூக்கி போட்டு விளையாடிக் கொண்டு இருந்ததாம். உடனே அன்னை தெரசா ஏன் இப்படி விளையாடுகிறாய் சாப்பிடு என்றாராம். உடனே அந்தக் குழந்தை அடுத்த வேளைபசித்தால் என்ன செய்வது? என்று கேட்டதாம். இந்த நிலையில் நாம் அந்தக் குழந்தையிடம் எத்தகைய வளர்ச்சியை எதிர்பார்க்கமுடியும். அது போன்ற ஏழைக் குழந்தைகள் சத்துணவு சாப்பிடுகின்றன என்று எண்ணும் போது எனக்கு மன மகிழ்ச்சி ஏற்படுகிறது.

''ஈன்றபோதுபெரிதுவக்கும் தாய்'' என்பார்கள். அது போல என்னைப் பெறாததாய் இந்தத் திட்டத்தை நல்ல திட்டம் என்று பாராட்டினார். அதுஒன்றேஎனக்கு போதும் இன்னும் பல திட்டங்கள் வரவிருக்கின்றன. அவைகளுக்கு நீங்கள் ஒத்துழைப்பு காவேண்டும் திட்டங்கள்

வெற்றி பெற்றால்அதுஒத்துழைப்புத் தருபவர்களை சாரும். தோல்விஎன்றால் என்னைச்சாரும். இங்கே குழந்தைகள் ஒன்றாகச் சேர்ந்துஅழகாகபாடினார்கள். நான் பூரிப்பு அடைந்தேன். அவர்கள் வருங்காலத்தில் நாட்டின் தலைவர்களாக- டாக்டர்களாக- இன்ஜினியர்களாக வர வேண்டும். என்னைப்பெற்றஅன்னை என்னைப் பெறாத அன்னை ஆகியோரை வேண்டி வாழ்த்துகிறேன். 4 அல்லது 5 ஆண்டுகளுக்குப் பின் அன்னை தெரசா தமிழகத்துக்கு வந்து பார்த்து எப்படி இருக்கிறது என்று பரிசீலித்து நல்லது செய்திருந்தால் அதைப் பாராட்டும்போது அதைக் கேட்டு நான் மகிழ்ச்சி கொள்ளவேண்டும்.

அன்னை தெரசா நோய்நொடியின்றி பல்லாண்டு வாழ்ந்து நாட்டுக்குத் தொண்டு செய்யும் சக்தியைப்பெறவேண்டும்.

ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்ற உணர்வில்மனிதத்தன்மையோடு ஒன்றுபடுவோம்.

இவ்வாறு முதல்வர் புரட்சித் தலைவர் பேசினார்.

ஜெகத்ரட்சகன் எம். எல். ஏ. நன்றி கூறினார், விழாவில் அன்னை தெரசாவின் அறப்பணிகளுக்காகஇயக்குனர்பாக்கியராஜ், நடிகர்ரஜனிகாந்த், வி. ஜி. பி,சகோதரர்கள், டாக்டர் ரெக்ஸ்சின் தந்தையார், ஓட்டல் அதிபர் சங்கத்தலைவர் புருஷோத்தமன், உக்கம் சந்த் ஆகியோர் தலா 10 ஆயிரம் ரூபாய் வழங்கினார்கள்.

குமாரபாளையம் எஸ். எஸ். எம். குடும்பம் சார்பில் ரூ. 1 லட்சத்துக்கான தைத்தறிஆடைகள் ஈகிள் பிளாஸ்க் கம்பெனி சார்பில் ரூ. 5 ஆயிரம் பெறுமான பிளாஸ்க்குகளும் வழங்கப்பட்டன.

அமைச்சர் அண்டேயின் முயற்சியினால்சென்னையில் உள்ள மருந்துக் கம்பெனிகளின் ஒத்துழைப்புடன் ரூ. 75 ஆயிரம் பெறுமானம் உள்ள மருந்துகளும் வழங்கப் பட்டன.

வக்கீல்களுக்கு பயிற்சி

## அமைச்சர் கோவேந்தன் தகவல்

மதுரை, மார்ச், 3— அமைச்சர்கோவேந்தன் மதுரையில் நிருபர்களிடம் பேசுகையில் கூறியதாவது:-

பிற்பட்ட வகுப்பைச் சேர்ந்தவர்கள் சட்டப் பட்டப்படிப்பு முடித்து வழக்கறிஞர்களாக ஆகிறார்கள். இவர்கள் வழக்கறிஞர் தொழிலில் சிறப்பாக இயங்க இவர்களுக்கு பயிற்சிதரும் திட்டம் பற்றி அரசு பரிசீலித்து வருகிறது.

இப்படிப்பட்ட சட்டப் பட்டதாரிகளுக்கு புகழ் பெற்றவழக்கறிஞர்களைக் கொண்டு பயிற்சி அளிக்க திட்டமிடப்பட்டு வருகிறது.

ஆண்டுதோறும் 20 பேர்களுக்கு இந்தப் பயிற்சி அளிக்கப் (1-ம் பத்தி பார்க்க)

## காரைக்குடியில் பல்கலைக்கழகம் அமைப்பு வேலை துவக்கம்

மதிய உணவு திட்டத்தால்

# பள்ளிகளில் சேர்ந்த சிறுவர்கள் இரு மடங்காக உயர்வு

## நிதி அமைச்சர்டாக்டர்நாவலர்தகவல்

சென்னை,மார்ச்-3 முதலமைச்சர் சத்துணவுதிட்டத்தால் பள்ளிகளில் 2லட்சம்குழந்தைகள் சேர்க்கும் இலக்கு தாண்டி 3·82லட்சம் சிறுவர்கள் சேர்க்கப்பட்டுள்ளனர் என்று நிதி நிலை அறிக்கையில் டாக்டர் நாவலர் தெரிவித்துள்ளார்.

காரைக்குடி பல்கலைக் கழக பணிகள் தொடங்க நடவடிக்கை எடுக்கப்பட்டு இருப்பதாகவும் நாவலர் கூறினார், டாக்டர் நாவலர்கூறியதாவது

வரவு- செலவுத் திட்ட நிதி ஒதுக்கத்தில், கல்விக்குத் தொடர்ந்து அதிக முக்கியத்துவம் அளிக்கப்பட்டு வருகிறது. கல்வி என்பதன்கீழ் செலவு தொடர்ந்து பெருகிக் கொண்டே வந்துள்ளது. 1984-85ஆம் ஆண்டு மொத்தமூலதனச் செலவு ரூ.404.76 கோடியாகும்.

முதலமைச்சர் சத்துணவுத் திட்டம் காரணமாக 6-11, 11-14 வயதுத் தொகுதியில் கூடுதலாக மாணவர்களைச் சேர்த்துக் கொள்வது உயர்ந்துள்ளது. இது 20 அம்சத் திட்டத்தின் கீழ் நிர்ணயிக்கப்பட்ட இலக்கினைவிடஅதிகமானதாகும். 2 லட்சம் சிறுவர்கள் என்ற இலக்குக்கு மாறாக,1983-84ல் 3.82 லட்சம்சிறுவர்கள் கூடுதலாகச் சேர்க்கப்பட்டுள்ளனர்,

1983-84ல் 6—14 வயதுத் தொகுதியில் உள்ள மாணவர்களுக்காக 390 முறைசாராக் கல்வி நிலையங்கள் இருந்தன. இவை ஒவ்வொன்றிலும் 30 மாணவர்கள் சேர்த்துக் கொள்ளப் பட்டனர். 1984—85ல் குடியாத்தம் பகுதியில்மேலும் 10முறைசாராக் கல்வி நிலையங்களைத்தொடங்கக்கருதப் பட்டுள்ளது,

1983-84-ல் மொத்தம் 17,047 முதியோர் கல்வி நிலையங்கள் செயல் பட்டன. இந்த நிலையங்களில் 5.50 லட்சம் முதியோர் பயின்றனர். அவர்களில் 3.55 லட்சம் பேர்கள் பெண்கள், 1984—85 1.000 ஏட்டறிவு நிலைக் கல்வி நிலையங்களைத் தொடங்க திட்டமிடப் பட்டுள்ளது.

### காரைக்குடியில் பல்கலைக்கழகம்

அண்மையில் கொடைக்கானலில் ஏற்படுத்தப்பட்ட அன்னை தெரசா மகளிர் பல்கலைக் கழகம், மகளிர் நலன் குறித்த ஆராய்ச்சியை மேற்கொள்வதுடன் மகளிர் நலத்திட்டங்களுக்காக ஆலோசனை, கண்காணிப்புப் பணிகளையும் நல்கும். ஏற்கெனவே அறிவித்தவாறு, காரைக்குடியில் ஒரு பல்கலைக் கழகம் தொடங்க நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது.

1984-85-ல்புதியபட்டப் படிப்பையும், பட்டமேற் படிப்பையும் தொடங்க ரூ. 7 லட்சம் நிதிஒதுக்கப் பட்டுள்ளது. 5 ஆண்டு சட்டப் படிப்பு 1983-84 முதல் கொண்டு வரப் பட்டுள்ளது.

தொழில் நுட்பக் கல்வித் துறையில் புதிய பாட முறைகளைக் கொண்டு வரவும், தக்க கல்வி வசதிகள் அளிக்கும் பொருட்டும், கட்டிடங்கள், கருவிகள் வகையில் வசதிகளை மேம்படுத்தவும் வரவு செலவுத் திட்ட மதிப்பீட்டில் நிதி ஒதுக்கப் பட்டுள்ளது. 1983—84ல் அரசு பல்தொழில் பயிற்சி பயிலகங்கள் ஒவ்வொன்றிலும் ஸ்ரீலங்காவிலிருந்து திரும்பியுள்ள தமிழ் அகதிகளின் நலன்கருதி 5இடங்களைக் கூடுதலாக அரசு ஏற்படுத்தியுள்ளது.

ஐக்கியநாடுகள்வளர்ச்சி நிறுவனம் மற்றும் பன்னாட்டுத் தொழிலாளர் நல அமைப்பின் நிதியுதவியுடன், அம்பத்தூர் தொழிற் பயிற்சி நிலையத்தில் கொண்டு வரப்பட்டுள்ள வாழ்க்கைத் தொழில் நவீன பயிற்சி முறை தற்போது மதுரை தொழிற்பயிற்சி நிலையத்திற்கும் நீட்டிக்கப்பட்டுள்ளது, இது விரைவில் செயல்படத் தொடங்கும்.

### தொழில் பயிற்சி

1983.84 ஆம் ஆண்டில் அரசு மூன்றாம் ஷிப்டு முறையை மூன்றுதொழில் பயிற்சி நிலையங்களில் கொண்டு வந்துள்ளது. 1984-85ஆம் ஆண்டில் சேலம் தொழிற்பயிற்சி நிலையத்திற்கும் இந்த ஏற்பாடு நீடிக்கப்படும்.

ஏற்படுத்தக் கருதியுள்ள அறிவியல்- தொழில்நுட்பவியல் நிலையங்களை அமைத்து, அவற்றைப் பராமரிப்பதற்காக நிறுவனம் ஒன்று ஏற்படுத்தப் பட்டுள்ளது.

இவ்வாறு நிதிநிலை அறிக்கையில்கூறப்பட்டுள்ளது.

பள்ளிமாணவன்கடத்தலா?

## போலீஸ் விசாரணை

சென்னை, மார்ச், 3— கர்நாடக மாநிலம் உல்சூர்பகுதியைச்சேர்ந்தவர் ஹைமதுல்லா. இவர் ஒரு வியாபாரி. இவருக்கு ஜப்ருல்லா (வயது 15) என்ற மகன் உண்டு.

ஜப்ருல்லா அங்குள்ள பள்ளியில் 6-வது வகுப்பு படித்து வந்தான். கடந்த மாதம் பள்ளிக்கு சென்ற ஜப்ருல்லா வீடு திரும்பவில்லை. இதுகுறித்து அவனது தந்தை நைமதுல்லா உல்சூர் போலீசில் புகார் செய்தார். போலீசார் வழக்குப்பதிவுசெய்து ஜப்ருல்லாவை தேடி வருகின்றனர். இது குறித்து கர்நாடக போலீசார் சென்னை நகர போலீசாருக்கும் தகவல் கொடுத்துள்ளனர். ஜப்ருல்லாவை பணத்துக்காக யாராவது கடத்தி இருப்பார்களா என்று கர்நாடக போலீசார் கருதுகின்றனர்,

நாங்கள் ஆட்சிக்கு வந்த பிறகு

# அண்ணாவின் கொள்கைகளைத்தான் நிறைவேற்றுகிறோம்

## முதல்வர் புரட்சித்தலைவர் பேச்சு

மதுரை, மார்ச். 3. நாங்கள் ஆட்சிப் பொறுப்பேற்ற பிறகு பேரறிஞர் அண்ணாவின் கொள்கைகளைத்தான் செயல்படுத்தி வருகிறோம் என்று முதல்வர் புரட்சித்தலைவர் தெரிவித்தார்.

வத்தலகுண்டில் 3 லட்சம் ரூபாய் செலவில் கட்டப்பட்ட 6 சத்துணவுக் கூடங்களை முதல்வர் புரட்சித்தலைவர் தலைமையில் அன்னை தெரசா திறந்து வைத்தார்.

விழாவிற்கு வந்திருந்தவர்களை சேடப்பட்டி முத்தையா எம். எல். ஏ. வரவேற்றார். மாவட்ட ஆட்சித் தலைவர் சந்திரலேகா அனைவருக்கும் மாலை அணிவித்தார். விழாவில் காஷ்மீர் முதல்வர் பரூக் அப்துல்லா, சத்துணவு அமைச்சர் சவுந்தரராஜன், அமைச்சர் காளிமுத்து, மற்றும் நாடாளுமன்ற சட்டமன்ற உறுப்பினர்கள் கலந்து கொண்டனர்.

நிகழ்ச்சியில் பேசுகையில் முதல்வர் புரட்சித்தலைவர் கூறியதாவது:-

இங்கே சத்துணவுகூடங்களை அன்னை தெரசா அம்மையார் அவர்கள் திறந்துவைத்த காட்சியை காண்கின்றபோது கண்கொள்ளாக் காட்சியாக அமைகிறது.

### அயராது உழைத்தவர்

அதைபார்க்குமெனக்கு என் முகத்தில் மகிழ்ச்சி பொங்குகிறது. அன்னை தெரசா அவர்கள் எத்தனையோ நாடுகளுக்கு சென்று எத்தனையோ பிரச்சினைகளை சந்தித்து மனிதகுலம் நலம் பெற அல்லும் பகலும் அயராது பாடுபட்டவர்கள். அவர்கள் இங்கே சத்துணவுக்கூடங்களை திறந்து வைத்திருப்பதை பார்த்து மெய்மறந்து நிற்கிறேன்.

இங்கே கூடியிருக்கும் குழந்தைகள், தாய்மார்கள் ஆகியோர்களைபார்க்கும்போது அவர்கள்என்ன நினைப்பார்கள் என்பதையும் சிந்தித்துபார்க்கிறேன். நான் திரைப்படங்களில் நடித்தபோது என்னென்ன கருத்துக்களை திரைப்படம் வாயிலாகநாட்டுமக்களுக்குசொல்லிவந்தேனோ அந்த கருத்துக்களை, அண்ணாவின் கொள்கைகளை, நான் ஆட்சி பொறுப்பு ஏற்ற பிறகு செயல்படுத்திவருகிறேன்.

முறையில் கல்வி கற்று அவர்களுடைய எதிர்காலத்தை எண்ணி, தொழில் கல்வி பயின்று நாட்டுக்கும் தங்களுக்கும் பயன்படும் வகையில் உயர்வு பெற வேண்டும் அவர்கள் பெரியவர்களாக ஆனவுடன் யாரிடமும் கைகட்டி வேலை செய்யாத அளவிற்கு அவர்களாகவே சுயமாக தொழில்கள் துவங்கும் அளவிற்கு தன்னம்பிக்கையைவளர்த்துக் கொள்ள வேண்டும். அந்த வகையில் புதிய தொழிற்கல்வி திட்டத்தை உருவாக்கியுள்ளோம். அதற்கு மக்கள் ஒத்துழைப்பு தர கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் பேசினார்.

### உழைப்பவரே உயர்ந்தவர்

தமிழக பட்ஜெட்டில் மக்களுக்கான நல்ல பல திட்டங்கள் அறிவிக்கப்பட்டுள்ளது. அந்ததிட்டங்களை செயல்படுத்த மக்களுடைய ஆதரவு தான் வேண்டும். உழைக்கும் மக்களின் ஒத்துழைப்போடு தான் இந்த அரசு நடைபெறுகிறது. உழைப்பவரே உயர்ந்தவர் என்ற அண்ணாவின் கொள்கையை இந்தஅரசு கடைபிடித்து செயல்படுத்தி வருகிறது.

பேரறிஞர் அண்ணாஅவர்கள்கூறியதுபோலநம்மிடம் சாதி, சமய, மத பேதமில்லை. எல்லா மக்களையும் சமமாக எண்ணி செயல்பட்டு வருகிறோம்.

இந்த விழாவில் கலந்து கொண்டு இருக்கும் நான் இந்து மதத்தைச் சேர்ந்தவன். காஷ்மீர் முதல்வர் பரூக் இஸ்லாமிய மதத்தைச் சேர்ந்தவர். அன்னை தெரசா கிறிஸ்துவ மதத்தைச் சேர்ந்தவர். இதுவே நமது ஒற்றுமை உணர்வை எடுத்துக்காட்டுகின்ற நிகழ்ச்சியாக அமைகிறது.

சத்துணவு அளிக்கப்படுவதை குழந்தைகள் கண்டிப்பாக உண்ணவேண்டும் [illegible]

வீடற்றவர்களுக்கு வீட்டுமனை

# குறியளவை விட 100 சதவிகிதத்திற்கு மேல்வழங்கியதமிழகம்

புதுடெல்லி, மார்ச் 3 வீடற்றவர்களுக்கு வீட்டுமனைகள் வழங்குவதில் தனது குறியளவைவிட 100 சதவிகிதம் அதிகமாகதமிழகம் வழங்கி இருக்கிறது.

மாநிலங்களில் வீட்டுமனைப் பட்டா வழங்குவது பற்றி மத்திய திட்டக்குழு ஆய்வு நடத்தி விவரம் வெளியிட்டு இருக்கிறது.

இருபது அம்ச திட்டத்தின் அடிப்படையில்வீடற்றவர்களுக்கு வீட்டு மனை வழங்கப்படுகிறது.

இந்த ஆண்டு ஜனவரி முடிய இந்தியா முழுவதும் 10 லட்சம்வீட்டுமனைகள் வீடற்றவர்களுக்கு வழங்கப்பட்டு இருக்கிறது.

குறியீட்டளவைவிட ஒரிசா 197 சதவிகிதமும் திரிபுரா 196சதவிகிதமும் குஜராத் 191சதவிகிதமும் வழங்கியிருக்கிறது.

குறியளவைவிட 100சதவிகிதத்துக்கு மேல் வீட்டு மனைகளை தமிழகமும், உத்திரப்பிரதேசமும், ராஜஸ்தானும் வழங்கி உள்ளன.

ஆந்திரம், அரியானா, மகாராஷ்டிரம் ஆகியவை குறியளவை விட 90 சதவிகிதம் அதிகம்வழங்கி உள்ளது.

அசாம், ஜம்மு காஷ்மீர் சில்யூனியன் பிரதேசங்கள் குறியளவுக்கு கீழே உள்ளன.

### திருமணம்

சென்னைநகர போலீஸ் இன்ஸ்பெக்டர் வசந்தகுமாரின் தம்பி சம்பத்குமாருக்கும், ஈரோடு கனரா பாங்கில் பணியாற்றும் கே. சுமதிக்கும் நாளை 4ந்தேதி காலை சாஸ்திரி நகர் 5-வது தெருவிலுள்ளசமூக கூடத்தில்திருமணம் நடைபெறுகிறது.

### கழகத் தோழர் இல்லத் திருமணம்

சென்னை, மார்ச் 3— சென்னை 132-வது வட்ட கழக மேலமைப்பு பிரதிநிதி இ. ஞானசேகரின் தங்கை மல்லிகா என்கிற பார்வதிக்கும், அயன்புரம் உலகநாதனின் மகன் யூ. தேவராஜுக்கும் நாளை 4-ந் தேதி (ஞாயிறு) காலை 5-30 மணிக்கு மயிலாப்பூர் டி.எஸ்.வி. கோவில் தெருவிலுள்ள ஸ்ரீ வெள்ளீஸ்வரர் கல்யாண மண்டபத்தில் திருமணம் நடக்கிறது.

நெய்வேலி நகர

### கழக செயல் வீரர்கள் கூட்டம்

நெய்வேலி, மார்ச். 3- நெய்வேலிநகரகழகசெயல் வீரர்கள் கூட்டம் நாளை 4-ந்தேதி (ஞாயிறு) மாலை 5 மணிக்கு நெய்வேலியிலுள்ள கழக தொழிற்சங்க அலுவலகத்தில் நடக்கிறது.

மாவட்ட செயலாளர் ஹீராசந்த் எம். பி. மாவட்ட இணைச் செயலாளர் இரா. கரிகாலன், ஏ. தங்கராசு எம்.எல்.ஏ. ஆகியோர் பங்கேற்கும் இந்தக் கூட்டத்தில் நெய்வேலி நகர, கழக, மன்ற தொழிற்சங்க, மகளிர், மாணவ அணியினர் தவறாது கலந்துகொள்ள வேண்டும் என்று நகர செயலாளர் துரை கதிரேசன் கூறியுள்ளார்.

திருவாரூர் தென்கோவன்

முன்னிலையில்

### கழகத்தில் இணைந்த மார்க்சிஸ்ட் கட்சியினர்

திருவாரூர், மார்ச் 3— திருவாரூர் சிக்கல் பகுதியில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியை சேர்ந்த 216பேர் அக்கட்சியிலிருந்து விலகி திருவாரூர் தென்கோவன் ஒன்றிய செயலாளர் திராவிடமணி முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர். அப்பகுதியில் பல இடங்களில் கழக கொடிகளை ஏற்றி வைத்து திருவாரூர் தென் கோவன் பேசினார்.



# மேற்கு வங்கத்தில் தொழில் உற்பத்தி 40 சதவிகிதம் குறைந்தது

## சட்டசபையில் முதல்வர் ஜோதிபாசு ஒப்புதல்

கல்கத்தா, மார்ச். 3. மேற்குவங்க மாநிலத்தில் தொழில் உற்பத்தி 40 சதவிகிதம் குறைந்துவிட்டதாக, முதலமைச்சர் ஜோதிபாசு சட்டசபையில் எதிர்க்கட்சியினரின் புகாரை ஒப்புக் கொண்டு பேசியுள்ளார்.

மேற்கு வங்க சட்டசபையில், கவர்னர் உரைக்கு நன்றி தெரிவிக்கும் தீர்மானத்தின் மீதான விவாதத்திற்கு பதிலளித்தார்.

விவாதத்தில் பங்கேற்ற எதிர்கட்சி உறுப்பினர்கள் மேற்குவங்க மாநிலத்தில் [illegible] கூட்டணி [illegible] விவசாய உற் [illegible] தாக குற்றம்சாட்டினர்.

விவாதத்திற்கு பதிலளிக்கையில் முதலமைச்சர் ஜோதிபாசு இந்தக் குற்றச்சாட்டு ஓரளவிற்கு சரியானதுதான் என ஒப்புக் கொண்டார்.

தொழில் உற்பத்தி சுமார் 40 சதவிகிதம் குறைந்துள்ளதாக முதல்வர் ஜோதிபாசு குறிப்பிட் [illegible]

மூலதனப்பற்றாக்குறை நவீன வசதிகள் கிடைக்கப் பெறாமை மத்திய அரசின் கொள்கை போன்றவையே காரணம் என முதல்வர் ஜோதிபாசு குறிப்பிட்டார்.

சட்டம் ஒழுங்கு நிலவரம் மாநிலத்தில் திருப்திகரமாக இருப்பதாகவும் முதல்வர்ஜோதிபாசுகுறிப் [illegible]

# கோயில்களில் இருந்து சிலைத்திருட்டை தடுக்க எலக்ட்ரானிக் கருவி வைக்க திட்டம்

தஞ்சை, மார்ச் 3— கோயில்களில் இருந்து விலை மதிப்பற்ற சிலைகள் திருட்டுப் போவதைத் தடுக்க புதிய எலக்ட்ரானிக் கருவிகள் வைப்பது பற்றி அரசு ஆலோசித்து வருகிறது.

தமிழ்நாடு காவல்துறை டைரக்டர் ஜெனரல் கே. ராதாகிருஷ்ணன் இது பற்றிய விவரத்தை தெரிவித்தார்.

கோயில் சிலைகள் திருட்டைத் தடுக்க ஒரு புதிய எலக்ட்ரானிக் கருவியை வெளிநாட்டு நிறுவனம் தயாரித்துக் கொடுத்து இருக்கிறது.

இந்தக் கருவியின் செயல் திறன் பற்றி பரிசீலிக்கப்பட்டு வருகிறது.

இந்த எலக்ட்ரானிக்கருவியின் செயல்திறன் திருப்திகரமாக இருந்தால் தமிழகத்தில் உள்ள புகழ் பெற்றதிருக்கோயில்களில் எல்லாம் படிப்படியாக இக்கருவி பொருத்தப்படும்.

இவ்வாறு போலீஸ் டைரக்டர் ஜெனரல் ராதாகிருஷ்ணன் கூறினார்.

எடை, உயரம், உடல்நலம் கூடியுள்ளது:

# சத்துணவு திட்டம் முனைப்புடன் அமுல்

## குழந்தைகளின் உடல் நலனை காக்கவும் திட்டம்

சென்னை, மார்ச். 3- குழந்தைகள் சத்துணவுத் திட்டத்தில் பயன் பெறும் குழந்தைகளின் எடை, உயரம், பொதுவான உடல் நலம் கூடியுள்ளது. வரும் ஆண்டுகளில் இத்திட்டம் தொடர்ந்து முனைப்புடன் செயல் படுத்தப்படும் என நிதிநிலை அறிக்கையில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

தமிழக அரசின் நிதிநிலை அறிக்கையில் குழந்தைகள் சத்துணவுத்திட்டம், மற்றும் வேலைவாய்ப்புத் திட்டங்கள் குறித்து தெரிவிக்கப்பட்டுள்ளதாவது:-

ஒரு ஆண்டில், நாள்தோறும் மாநிலம் முழுவதுமாக சுமார் 65லட்சம் குழந்தைகளுக்கு உணவளிக்கும் இத்திட்டம் தொடர்ந்து சிறப்பான திட்டமாகச் செயல்பட்டு வருகிறது.

### முதியோர்க்கு உதவிகள்

இத்திட்டம், முதியோர் உதவித் தொகை பெறுபவர்களுக்கும் 1983 ஆம் ஆண்டு சனவரித் திங்கள் 15 ஆம் நாள்முதல் நீட்டிக்கப்பட்டுள்ளது.

முதியோர் உதவித் தொகை பெறும் சுமார் 1,996 39 பேர் இத்திட்டத்தின் கீழ் பயன் பெறுகின்றனர்.

இவர்களில், 43,888பேர் ஆதரவற்ற விதவைகள், 14,471 பேர் உடலூனமுற்றோர், மற்றும் 30.000 பேர் வேளாண்மைத் தொழிலாளர்கள், தமிழ்நாடு முன்னாள் படைவீரர்கள் நல நிதியிலிருந்து முதியோர் உதவித் தொகை பெறுகின்ற முன்னாள் படைவீரர்களுக்கும் இத்திட்டம் நீட்டிக்கப்பட்டுள்ளது.

இத்திட்டம் கொண்டு வரப்பட்டதன் பயனாக பள்ளிகளில் மாணவர்களின் எண்ணிக்கை பொதுவாக பெருகியுள்ளது.

### மாணவர்கள் வருகை உயர்வு

1982-83ம் ஆண்டில் 2,63 லட்சம் சிறார்களும் 1983-84ம் ஆண்டில் 3.82 லட்சம் சிறார்களும் பள்ளிகளில் அதிகமாக சேர்ந்துள்ளனர்.

இத்திட்டத்தைச் செயலுக்குக் கொண்டு வருமுன், பள்ளிகளில் ஆண்டொன்றுக்கு கூடுதலாகச் சேர்க்கப்படும் மாணவர்களின் எண்ணிக்கை சராசரியாக 1.75 லட்சம்தான் இருந்தது.

கூடுதலாகச் சேர்க்கப்படும் மாணவர்கள் எண்ணிக்கைக் கணிசமாக கூடியதிலிருந்து இத்திட்டத்தின் நன்மைகள் தெளிவாகத் தெரிகின்றன.

மேலும், முதலமைச்சர் குழந்தைகள் சத்துணவுத் திட்டத்தின் கீழ் குழந்தைகள் நலனைப் பேணும் வகையில் விரிவான திட்டம் ஒன்றும் வகுக்கப்பட்டுள்ளது.

மருத்துவப் பணியாளர்கள் சிறார்களின் நலன் தொடர்பான அட்டைகளைப் பராமரிப்பதுடன் சிறார் நலமையங்களையும் முறையாகப் பார்வையிடுகின்றனர்.

அம்மைப்பால் குத்தும் திட்டமும், நோய்த் தடுப்பு ஊசி போடும் திட்டங்களும் மேற்கொள்ளப்படுகின்றன. தெரிந்தெடுக்கப்பட்ட சிறார் நலமையங்களில் மாதிரி ஆய்வு ஒன்று நடத்தப்பட்டதில் முதலமைச்சர் குழந்தைகள் சத்துணவுத் திட்டத்தில் பயன்பெறும் சிறார்களின் உயரம், எடை பொதுவான உடல் நலன் கூடியிருப்பது தெரிய வந்துள்ளது.

இவ்வாறாக முதலமைச்சர் குழந்தைகள் சத்துணவுத் திட்டத்தின் முக்கிய நோக்கங்களான சிறார்களின் கல்வி, சுகாதாரம் பிறநலன் ஆகியவை நிறைவடைந்து வருகின்றன.

வரும் ஆண்டுகளில் இத்திட்டம் தொடர்ந்து முனைப்பாகச் செயல்படுத்தப்படும்.

இவ்வாறு நிதி நிலை அறிக்கையில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

# புதிய மின்சார திட்டங்கள்

(3-ம் பக் தொடர்ச்சி)

அளவு 1.5 லட்சம் டன் மட்டுமேயாகும்.

மின்சக்தி நிலைமை சீரடைந்துள்ளதால் மின்வெட்டைக்குறைக்கமுடிந்தது. மின்சக்தியை பயன்படுத்துவது குறித்த கட்டுப்பாடுகளை தளர்த்தவும் இது உதவியது.

இந்த ஆண்டில் மின் சக்தியின் பயன்பாடு மீதான கட்டுப்பாடுகளை மேற்கொண்டும் அதிகரிக்காமல் நிலைமையைச் சமாளிக்க முடியும் என்று மின்வாரியம் நம்பிக்கைகொண்டுள்ளது

மின்சக்தி மேம்பாட்டுத் திட்டங்களை விரைவு படுத்துவதன் மூலமே, மாநிலத்தில் தொடர்ந்து நிலவும் மின் பற்றாக்குறைக்கு நிலையான தீர்வு காண முடியும்

### வடசென்னையில் அனல் மின் நிலையம்

ஏழாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில், மேட்டூர் அனல் மின் நிலைய நீட்டிப்பு திட்டம் வடசென்னை அனல் மின் திட்டம், தூத்துக்குடி அனல் மின் நிலைய நீட்டிப்புத்திட்டம் ஆகிய மூன்று பெரிய திட்டங்கள் மேற்கொள்ளக் கருதப்பட்டுள்ளது.

இவற்றில், மேட்டூர் அனல் மின் நிலைய நீட்டிப்புக்கு மத்திய அரசு அனுமதி வழங்கியுள்ளது. இதன் மூலம், ஒவ்வொன்றும் 210 மெகாவாட் உற்பத்தி செய்யும் இரண்டு பிரிவுகள் சேர்க்கப்படும். பிற இரண்டு திட்டங்கள் மத்திய அரசின் தீவிர பரிசீலனையில் உள்ளன.

84-85 ம் ஆண்டில்

# 65 லட்சம் டன் நெல் உற்பத்தி செய்ய இலக்கு நிர்ணயம்

## நிதிநிலை அறிக்கையில் டாக்டர் நாவலர் அறிவிப்பு

சென்னை மார்ச் 3- அடுத்த ஆண்டில் 65 லட்சம் மெட்ரிக்டன் நெல், 30 லட்சம் டன் சிறு தானியங்களும் உற்பத்தி செய்ய இலக்கு நிர்ணயம் செய்யப்பட்டுள்ளதாக நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் அறிவித்தார்.

நிதிநிலை அறிக்கையில் இது பற்றி கூறப்பட்டு இருப்பதாவது:—

மாநிலத்தின் பொருளாதார வளர்ச்சியில் வேளாண்மைத்துறையின் பங்கு பற்றி மிகவாக வலியுறுத்திக்கூற வேண்டியதில்லை. கடந்த இரண்டு ஆண்டுகளில், வேளாண்மைக்கு ஏற்பட்ட இடர்ப்பாடுகள், உணவுத் தானியங்கள் உற்பத்தி, அவை கிடைக்கும் அளவு ஆகியவற்றை மட்டுமின்றி ஆதாரத்துறையான இந்த துறையில் வேலைவாய்ப்புகளையும் மோசமாகப் பாதித்துள்ளன.

### விதைப் பண்ணை

இந்தஆண்டு இறுதியில் சுமார் 50 லட்சம் மெட்ரிக்டன் நெல்லும், 19 லட்சம் மெட்ரிக் டன் சிறு தானியங்களும் உற்பத்தி செய்யப்படும் என எதிர்பார்க்கப் படுகிறது.

அடுத்த ஆண்டில் 65 லட்சம் மெட்ரிக் டன் நெல்லும், 30 லட்சம் மெட்ரிக்டன் சிறு தானியங்களும் உற்பத்திசெய்ய வேண்டுமென இலக்கு நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

அடுத்த நிதியாண்டில் மாநிலத்தில் தற்போது உள்ள விதை பதப்படுத்தும் பிரிவை ரூ. 8 லட்சம் செலவில் வலுப்படுத்தவும் விதைப் பண்ணைகளில் ரூ 18 லட்சம் செலவில் பாசன வசதிகளை பெருக்கவும் திட்டமிடப்பட்டுள்ளது.

### உழவர் பயிற்சி நிலையம்

ராமநாதபுரம் மாவட்டம் பரமக்குடியில் உழவர் பயிற்சி நிலையத்தை ஏற்படுத்தவும் கருதப்பட்டுள்ளது. இரண்டு பரம்புப் பொறிகளை ரூ. 20.56 லட்சம் செலவில் வாங்கவும், ரூ. 19.87 லட்சம் செலவில் ஆழ் கிணறு துளையிடும் கருவிகள் 5 வாங்கவும் வேளாண்மைப் பொறியியல்துறை திட்டமிட்டுள்ளது.

பல்லடம், காங்கேயம் மற்றும் பெருந்துறை ஆகிய இடங்களில் உள்ள மாநில வேளாண்மை விளைபொருள் தர ஆய்வுகூடங்களுக்கும் கட்டிடம் கட்டவும் எண்ணப்பட்டுள்ளது

எண்ணெய் வித்துக்களின் உற்பத்தியைப் பெருக்க மாநில அரசு உரிய முக்கியத்துவம் கொடுத்துள்ளது. 1984-85 ல் எண்ணெய் வித்துக்கள் துறையின் மூலம் வேர்க்கடலைவித்துக்களை வழங்கி அதன் மூலம் எண்ணெய் வித்துக்கள் பயிரிடப்படும் பரப்பளவை 4 சதவீதத்திலிருந்து 5 சதவீதமாகப் பெருக்கிட எண்ணெய் வித்துக்கள் துறை திட்டமிட்டுள்ளது நவ்லொக்கல உள்ள துறை.

பண்ணையில் உற்பத்தி செய்யப்பட்ட புதியகலப்பின வகை "நெட்டை மற்றும்குட்டை" நாற்றுக்கள் 1984 85 முதல் உழவர்களுக்குக் கிடைக்கும். நடப்பாண்டில் இத்துறை 36.69 லட்சம் நாற்றுக்களை வழங்கியுள்ளது.

தற்போது 4.55 லட்சம் கலப்பின நாற்றுக்கள் வழங்கப்பட்டிருக்க அதன் அளவை 5 75 லட்சம் நாற்றுகளாக பெருக்கிட திட்டமிடப்பட்டுள்ளது

எண்ணெய் வித்துக்கள் துறையின் கீழ் நடப்பாண்டில் 14.54 லட்சம் எக்டேரில் பயிரிடவும், 1984-85ல் 14.67 லட்சம் எக்டேரில் பயிரிடவும் திட்டமிடப்பட்டுள்ளது. மேலும், எண்ணெய் வித்துக்கள் உற்பத்தியை அடுத்தாண்டில், நடப்பாண்டு இலக்கான 14.25 லட்சம் மெட்ரிக் டன்னிலிருந்து, 14.60 லட்சம் மெட்ரிக்டன்னாக பெருக்கிடத் திட்டமிடப்பட்டுள்ளது. நடப்பாண்டில் 10,728 மெட்ரிக் டன் எண்ணெய் வித்துக்களை இத்துறை வழங்கியுள்ளது. 1984 85ல் 12,550 மெட்ரிக் டன் எண்ணெய் வித்துக்களை வழங்கக் கருதியுள்ளது.

# திட்ட பணியில் மின் துறைக்கு முக்கிய பங்கு

திட்டப் பணிகளின் கீழ் நிதி ஒதுக்குவதில் மின் துறைக்கு உரிய முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளது.

அடுத்த நிதியாண்டில் மின்துறைக்கு மத்திய திட்டக்குழு 237 கோடி ரூபாய் ஏற்பளித்துள்ளது.

எனினும் நிலக்கரி, எண்ணெய், இரயில்வே கட்டணம், பிற மாநிலங்களிலிருந்து வாங்கும் மின்சக்திக்கான கட்டணங்கள் ஆகியவை பெரும் அளவில் உயர்ந்து விட்டதால், தமிழ்நாடு மின்வாரியத்தின் ஆதாரங்களுக்கும், பொறுப்புக்கும் இடையே உள்ள இடைவெளி மிக அதிகமாக உள்ளது. நிலக்கரி விலையைத் தற்போது 25 சதவீதமாக உயர்த்தியுள்ளது மின்வாரியத்திற்கு ஆண்டுதோறும் சுமார் ரூ. 15 கோடி நிதிச் சுமையைச் சேர்க்கிறது.

1983ம் ஆண்டு மே திங்களில் செய்யப்பட்ட மிதமான மின் கட்டண திருத்தம் புதிய திட்டங்களுக்கு நிதி உதவி அளிக்க போதுமானதாக இல்லை. தேவையான நிதிஆதாரங்களைத் திரட்ட மாற்று முறைகள் உருவாக்கப்பட வேண்டியிருக்கின்றன.

இவ்வாறு நிதிநிலை அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

அன்னை தெரசாவுக்கு விழாக்குழு சார்பில் முதல்வர் புரட்சித்தலைவர் தஞ்சாவூர் தட்டினை அன்பளிப்பாக வழங்கினார்.

★ வேலை வாய்ப்பு அலுவலகங்களில் கம்யூட்டர் மூலம் விரைவான பணி,

## நிறுவன நிதித் துறை மூலம்

# 1.75 லட்சம் பேர்களுக்கு ரூ 40 கோடி கடன் உதவி

## ஏழை - எளிய மக்களின் நலன் காக்கும் புரட்சித்தலைவர் அரசின் நிதி நிலை அறிக்கை

சென்னை, மார்ச். 3- தமிழக அரசின் நிறுவன நிதித்துறை மூலமாக 1984-ல், 1 லட்சத்து 75 ஆயிரம் ஏழை எளிய மக்களுக்கு சுமார் 40 கோடி ரூபாய் வங்கிக்கடன் உதவி வழங்க திட்டமிடப்பட்டுள்ளதாக நிதி நிலை அறிக்கையில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

இந்த நிறுவனம் தொடங்கப்பட்ட 2 மாதங்களில் 1லட்சத்து 70 ஆயிரத்து 564பேர்களுக்கு 30.16 கோடி ரூபாய் கடன் வழங்கி சாதனை புரிந்துள்ளது

ஏழை எளிய மக்களின் பாதுகாவலராகவிளங்கும் புரட்சித் தலைவர் அரசின் நிதி நிலை அறிக்கையில் கூறப்பட்டுள்ளதாவது,-

வேலையில்லாப் பிரச்சினையைப் போக்குவதில் அரசு உரிய கவனம் செலுத்தி வருகிறது.

இப்பிரச்சினைக்குத் தீர்வு காண வேலை வாய்ப்புப் பணிகள் துறை ஏற்படுத்தப்பட்டு தற்காலிகமான மற்றும் நிலையான தீர்வு காண நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன.

மோசமான பருவநிலைகளால் பாதிக்கப்பட்ட நிலமற்ற உழவர்கள் மற்றும் வேளாண்மைத் தொழிலாளர்கள் ஆகியோரிடையே நிலவிய வேலை வாய்ப்பில்லாபிரச்னைக்கு தீர்வு காண வறட்சிதுயர் தணிப்புநடவடிக்கைகளும் கிராமப்புற வேலைவாய்ப்புத் தேசியத் திட்டப்பணிகளும் படித்தவர்களுக்கு தீர்வு காண பல்வேறு திட்டங்களும் மேற்கொள்ளப்பட்டன.

மத்திய அரசு உதவியுடன் செயலாக்கப்படும் திட்டமாகிய கிராம வேலை வாய்ப்புத் தேசிய திட்டத்தின்கீழ், 1979-80 முதல் 1984 சனவரி முடியஉள்ள கால அளவில், 171,010 பணிகள் முடிக்கப்பட்டுள்ளன.

### வேலை தேடுவோருக்கு பணிவசதி

நடப்பாண்டில் இத்திட்டத்திற்கான மொத்தச் செலவு ரூ. 36.85 கோடியாகும்.

1984 85ஆம் ஆண்டின் வரவு-செலவுத் திட்டத்தில் இதற்காக ரூ 42.60 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது. இத் திட்டத்தின் சிறப்புத் தன்மை என்னவென்றால் வேலையற்ற ஏராளமான தொழிலாளர்களுக்கு வேலை வாய்ப்பை அளிப்பதுடன் கிராம மக்களுக்கு இன்றியமையாதத் தேவைகளான சாலைகள், சமுதாயக்கூடங்கள், பள்ளிகள் உருவாகியுள்ளன.

வேலை தேடுவோருக்கு மேலும் சிறந்த பணிவசதிகளைச் செய்து கொடுக்கும் நோக்குடன், வேலைவாய்ப்பு அலுவலகங்களில் கம்ப்யூட்டர் முறையைக் கொண்டுவர அரசு கருதியுள்ளது.

இத்திட்டம், படிப்படியாகச் செயல்படுத்தப்படும், சென்னையிலுள்ள இந்து வேலைவாய்ப்பு அலுவலகங்களில் 1984-85ஆம் ஆண்டு ரூ.6லட்சம் செலவில் கம்பியூட்டர் முறை செயல்படுத்தப் படும்.

### ஏழைகட்கு ரூ 40 கோடிக்கு வங்கி கடன்

ஒருங்கிணைந்த கிராம வளர்ச்சித் திட்டத்தின் கீழ் 1984 சனவரிதிங்கள் முடிய 173,431 பேர்களுக்கு நன்மை பயக்கும் வகையில் ரூ. 54.51 கோடி மான்ய உதவித்தொகையாகவும் கடன் வழங்கும் நிறுவனங்கள் அளிக்கும் கடன் தொகையாகவும் திரட்டப்பட்டுள்ளன. இத்திட்டத்தால் பழங்குடி மக்களும் பயனடைந்துள்ளனர்.

இதுவரைஅடைந்துள்ள முன்னேற்றம் 1984-85ம் ஆண்டிலும் தொடர்ந்து நிலைநாட்டப்படும் என்று எதிர்பார்க்கலாம்.

### கடன் மான்யம்

சமுதாயத்தில் நலிந்த பிரிவினர் வறுமைக்கோட்டைக் கடக்க இயலும் வகையில் ஏழை எளிய மக்களுக்கு கடன் உதவி வழங்க அரசு 1983ம் ஆண்டில் நிறுவன நிதித்துறை என்ற தனிப்பட்ட துறையை ஏற்படுத்தியுள்ளது.

இது ஏற்படுத்தப்பட்ட இரண்டு திங்களுக்குள் 170,564 பேர்களுக்கு ரூ. 30.16 கோடி அளவிற்கு கடன்களும், மான்யமும் வழங்கியுள்ளது. இவர்களில் 56,966பேர்ஆதிதிராவிடர்களாவர். மார்ச் 1984-ல் இத்துறை இந்த மாநிலத்திலுள்ள 1,75,000 ஏழை எளிய மக்களுக்கு சுமார் ரூ. 40கோடி வங்கிக்கடன் உதவி வழங்கத் திட்டமிட்டுள்ளது.

இவ்வாறு கழக அரசின்

### அரசு ஆற்றிய பணி பற்றி நாவலர்

1983-84ஆம் ஆண்டிற்கான திருத்த மதிப்பீடுகளையும், 1984-85ம்ஆம் ஆண்டிற்கான வரவு-செலவுத் திட்ட மதிப்பீடுகளையும் இம்மன்றத்தின் ஒப்புதலுக்கு வைக்க விழைகிறேன்.

சென்ற 2 ஆண்டு காலமாகத் தமிழகத்தில் இயற்கையின் விளைவால் ஏற்பட்ட இடர்ப்பாடுகளையும் செயற்கையால் ஏற்படுத்தப்பட்ட தொல்லைகளையும் பெருமளவுக்குச் சமாளித்து மக்களின் துயர்களைத் துடைப்பதிலும், ஏழை, எளிய, நலிவடைந்த மக்களுக்கு நல்வாழ்வு அளிப்பதிலும், பல்வேறு துறைகளில் உற்பத்தி வளங்களைப் பெருக்குவதிலும், வளர்ச்சித் திட்டங்களை நிறைவேற்றுவதிலும், நாட்டில் சட்டம்-ஒழுங்கு- அமைதி நிலைகளைக் காப்பாற்றுவதிலும், இந்த அரசு

7-வது ஐந்தாண்டு திட்டத்தில் 3 பெரிய திட்டங்கள்

# மேட்டூர், தூத்துக்குடி மின் நிலைய விஸ்தரிப்பு வடசென்னைமின்திட்டம்

## நிதி நிலை அறிக்கையில் டாக்டர் நாவலர் விளக்கம்

சென்னை, மார்ச். 3- ஏழாவது ஐந்தாண்டு திட்டத்தில் மேட்டூர், தூத்துக்குடி அனல் மின் நிலையங்களின் விஸ்தரிப்பு திட்டங்கள், வடசென்னை அனல் மின் திட்டம் ஆகிய 3 பெரிய திட்டங்களை மேற்கொள்ள கருதப்பட்டுள்ளது. என்று டாக்டர் நாவலர் தெரிவித்தார்.

புதிய மின் திட்டங்கள் குறித்து நிதி நிலை அறிக்கையில் நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் கூறி இருப்பதாவது:-

சென்ற நிதி ஆண்டு தொடக்கத்தில், தமிழ் நாடு மின் அமைப்பின் நிறுவுத்திறன் 3,109 மெகாவாட்டாக இருந்தது. கல்பாக்கம் அனல் மின் நிலையம்தொடங்கியதிலிருந்து தற்போதுஇந்த மின் அமைப்பின் அளவு 3,314 மெகாவாட்டாக உயர்ந்துள்ளது.

நீர்மின் தேக்கங்களை அறிவார்ந்த முறையில் பயன்படுத்தி, மின் உற்பத்தியைச் சீரமைத்ததாலும் கூடுதல் மின் உற்பத்தி கிடைத்தது.

1983 ஜனவரியிலிருந்து ஜூன் வரையில் சராசரியாக நாளொன்றுக்கு 23.83 மில்லியன் யூனிட் என்றிருந்த மின் உற்பத்தி, இந்த ஆண்டில் சராசரியாக நாளொன்றுக்கு 33.68 மில்லியன் யூனிட் மின் சக்தி கிடைக்கும் என்று மதிப்பிடப்பட்டுள்ளது.

1-2-1983 அன்று 128 மில்லியன் யூனிட்டாக இருந்த புனல் மின் உற்பத்தி திறன், 1-2-1984 அன்று 1.068 மில்லியன் யூனிட்டாயிற்று இதனால், துள்ளன, தூத்துக்குடி அனல் மின் நிலையத்தில் 1983 டிசம்பரில் 333 மில்லியன் யூனிட் மின்சாரமும் 1984 ஜனவரியில் 344 மில்லியன் யூனிட் மின் சாரமும்உற்பத்திசெய்யப் பட்டுள்ளன.

இது இந்த அனல் மின் நிலையத்தின் ஒரு சாதனையாகும். எனினும் இந்த அளவு மின் உற்பத்திக்குப் போதிய நிலக்கரி கிடைப்பது மிகவும் அரிதாக உள்ளது.

மாதம் ஒன்றுக்கு 2.7 லட்சம் டன் நிலக்கரி தேவையாகயிருக்க, வழங்கப்படுகின்ற நிலக்கரியின்

# சத்துணவு விஸ்தரிப்பு... (முதற்பக்கத் தொடர்ச்சி)

இருப்பதைக் கருதி கூடுதல் நிதி ஆதாரங்களைத் திரட்டுவதற்கான அவசியத்தை உறுப்பினர்கள் உணர்ந்து கொள்வர்.

கடந்த ஆண்டு வரவு-செலவுத்திட்டத்தில், ஒரு சில இனங்கள் குறித்து நுழைவு வரி விதிக்கக் கருதியது பற்றி உறுப்பினர்கள் நினைவில் வைத்திருப்பார்கள். எனினும், சமுதாயத்தின் பல்வேறு பிரிவைச்சேர்ந்த பிரதிநிதிகள் முறையிட்டு கொண்டதைக் கருத்தில் கொண்டு வணிகர்கள், பொதுமக்கள் ஆகியோரின் நலனைப் பாதிக்காமல் செயலுக்குக்கொண்டு வரக்கூடிய மாற்று வரி ஆதாரங்களை ஆய்ந்து அரசுக்கு அறிவிக்க, அரசு, குழு ஒன்றை நியமித்தது. கூடுதல் நிதி ஆதாரங்களை திரட்டுவதற்காக நுழைவு வரிக்குப்பதிலாகக் கூடுதல் விற்பனை வரியை உயர்த்தலாம் என்று மேற்படி குழுவின் அரசு சார்பற்ற உறுப்பினர்கள் கருத்து தெரிவித்தனர்.

## கூடுதல் நிதி ஆதாரம்

எனினும், இவ்வரிச் சுமையை, வணிகர்கள். நுகர்வோர்கள்மீதுசுமத்தகூடாது என்றுள்ள தடையைஎடுக்கவேண்டும் என்று அவர்கள் கருத்து தெரிவித்தனர். தமிழ் நாட்டிற்கும் அண்டை மாநிலங்களுக்கும் இடையே தற்போதுள்ள விற்பனை வரியில் கணிசமான அளவு வேறுபாடு இருக்கும் இனங்களில் எல்லாம் கூடுதல்நிதிஆதாரங்களைத் திரட்டும் பொருட்டு, தமிழ் நாட்டில் அத்தகைய இனங்கள் தொடர்பாக விற்பனை வரியை உயர்த்துவதற்கு வாய்ப்பு உள்ளது என்றும் குழு கருத்துதெரிவித்துள்ளது

## சுமையாக இருக்காது

கூடுதல் நிதி ஆதாரங்களைத் திரட்டுவதற்கான செயற்குறிப்புக்களை வகுக்கையில், இக்குழுவின் கருத்துக்களை அரசு கருத்தில் கொண்டுள்ளது.

எனினும், தற்போது விதிக்கக் கருதப்பட்டுள்ள கூடுதல் விற்பனை வரி வீதங்கள், வரி விதிக்கத்தக்க விற்பனைத்தொகை ரூ. 3லட்சத்திற்கு மேற்பட்டால்தான் விதிக்கப்படலாம் என்பதைக்கருத்திற் கொண்டு. இத்தகைய கூடுதல் வரி வீதங்கள் வணிக சமுதாயத்திற்குச் சுமையாக இருக்காது என்றும் எனவே வரிச் சுமையை நுகர்வோரிடமிருந்து வசூலிக்க வேண்டியதில்லை என்றும் கருதப்படுகிறது.

எனவே கீழ்கண்ட வரி விதிப்புகளை செயலுக்கு கொண்டுவர கருதப்படுகிறது.

ஆழ்ந்த ஆலோசனைக்குப் பின்னர் கூடுதல் விற்பனை வரி விகிதங்களை 1984ம் ஆண்டு ஏப்ரல்திங்கள் 1ம்நாள் முதற் கொண்டு கீழ்குறிப்பிட்டவாறு உயர்த்த அரசு முடிவு செய்துள்ளது-

ரூ. 3 லட்சத்துக்கு மேல் ரூ. 5 லட்சம் வரையுள்ள வரி விதிக்கத்தக்க விற்பனை தொகைக்கான வரி வீதத்தை 0.4 சதவீதத்திலிருந்து 0.5 சதவீதமாக உயர்த்துதல்.

ரூ.5 இலட்சத்திற்கு மேல் ரூ 7இலட்சம் வரை வரி விதிக்கத்தக்க விற்பனைத் தொகைக்கான வரிவீதத்தை 0.5 சதவீதத்திலிருந்து 0.7 சதவீதமாக உயர்த்துதல்.

ரூ. 7 லட்சத்திற்குமேல் ரூ. 10 லட்சம் வரையுள்ள வரி விதிக்கத்தக்க விற்பனைத் தொகைக்கான வரி வீதத்தை 0.6 சதவிகிதத்திலிருந்து 1 சதவிகிதமாக உயர்த்துதல்.

ரூ. 10 லட்சத்திற்கு மேற்பட்ட வரி விதிக்கத்தக்க விற்பனைத் தொகைக்கான வரி வீதத்தை 0.7 சதவீதத்திலிருந்து 1.25 சதவீதமாக உயர்த்துதல்.

வரி விதிக்கத்தக்க விற்பனைத் தொகையுடன் ஒப்பிட்டுப் பார்க்கையில் மேற்குறிப்பிட்ட வரி விதிப்புகள் ஏற்ற வீதத்தில் அமைந்துள்ளதால், வணிகர்கள் செலுத்த வேண்டிய கூடுதல் வரியினால் அவர்களுக்கு அதிகச் சுமை ஏற்படாது.

இத்தகைய வரி விதிப்பு வாய் ரூ. 20.25 கோடி அளவிற்கு கிடைக்கும்என எதிர் பார்க்கப் படுகிறது.

தற்போது தமிழ்நாட்டில் ஒரு சில பொருள்களின் மீது விதிக்கப்படும் விற்பனை வரி வீதம், அண்டைய மாநிலங்களான கருநாடகம் ஆந்திரம், கேரளம்ஆகிய மாநிலங்களில்விதிக்கப்படும்வரி வீதங்களை விடக் குறைவாக உள்ளது. எனினும் இத்தகைய பொருள்களில் ஒரு சிலவற்றின் மீது குறிப்பாகப் பெட்ரோலியம் பொருள்கள் மீது மட்டுமே விற்பனை வரி வீதத்தை உயர்த்தக் கருதப்படுகிறது.

இவ்வாறு உயர்த்தப் படும்விற்பனை வரி வீதங்கள் அறிவிக்கை நாளிலிருந்து நடைமுறைக்கு வரும்.

இதன் விவரம் வருமாறு:-

பெட்ரோல் 11 சதவிகிதத்திலிருந்து 14 சதவிகிதமாக உயர்த்தப்படுகிறது.

விமான டர்பைன் எண்ணெய் 7 சதவீதத்திலிருந்து 10 சதவிகிதமாக உயர்த்தப்படுகிறது.

உயர்வேக டீசல் எண்ணெய் 11 சதவீதத்திலிருந்து 14 சதவிகிதமாக உயர்த்தப்படுகிறது.

இலகுவான டீசல் எண்ணெய் 11 சதவீதத்திலிருந்து 14 சதவீதமாக உயர்த்தப்படுகிறது.

மசகு எண்ணெய் வகையறா 8 சதவீதத்திலிருந்து 10 சதவீதமாகஉயர்த்தப்படுகிறது.

கனிம எண்ணெய் 8 சதவீதத்திலிருந்து 10 சதவீதமாக உயர்த்தப்படுகிறது.

இவ்வரி விதிப்புகளினால் கூடுதலாக ரூ.27 கோடி வருவாய் கிடைக்கும் என்று எதிர்பார்க்கப் படுகிறது.

கோன் ஹோசைரி நூல் நீங்கலாக பருத்தி நூல் விற்பனை மீது விதிக்கப் படும் விற்பனை வரியை 3 சதவிகிதத்திலிருந்து 4 சதவிகிதமாக உயர்த்த திட்டமிடப்பட்டுள் ளது.

இதன்மூலம் ரூ.5கோடி கிடைக்கும் என்று எதிர் பார்க்கப்படுகிறது.

இந்திய அரசியலமைப்புச் சட்டத்தில் செய்யப்பட்டுள்ள 46-வது திருத்தத்தினால், மாநில அரசுகளுக்குக் கொடுக்கப்பட்டுள்ள அதிகாரங்களைப் பயன்படுத்தி தவணைக் கொள்முதல். பணி ஒப்பந்தக் குத்தகை போன்ற நடவடிக்கைகள் மீதும் விற்பனை வரி விதிக்க மாநில அரசுக்கு இயலும் வகையில் அதிகாரம் அளிக்கும் சட்ட முன்வடிவு ஒன்று இச்சட்டமன்றக் கூட்டத் தொடரில் கொண்டுவரப்படுகிறது.

மேலும் சிப்பம் செய்யப் படும் பொருள்களின் மீது விதிக்கப்படும் வீதங்களிலேயே சிப்பப் பொருள்களுக்கும் சிப்பக் கட்டணங்களுக்கும் வரி விதிக்கவும் வகை செய்யும் சட்ட முன்வடிவு ஒன்றும் இச்சட்ட மன்றக் கூட்டத் தொடரில் கொண்டு வரப்படுகிறது.

இந் நடவடிக்கைகளினால் ரூ. 5 கோடி ரூபாய் கிடைக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

கூடுதல் நிதி ஆதாரங்களைத் திரட்டுவதற்கான இத்தகைய நடவடிக்கைகளினால் மொத்தம் ரூ 57.25 கோடி கிடைக்கும் என்று எதிர்பார்க்கப் படுகிறது.

## பல்வேறு வரி சலுகை

அதே சமயததில, கீழ்க் காணும் வரிச்சலுகைகளையும் அளிக்க உத்தேசிக்கப்பட்டுள்ளது என்பதை அறிய உறுப்பினர்கள் மகிழ்ச்சியடைவர்.

தற்போது ரூ. 50,000 மொத்த விற்பனைத் தொகை வரையில், பல முனை விற்பனை வரி விதிப்பினின்றும் விலக்கு அளிக்கப்படுகிறது. இத்தகையை விலக்கு அளிப்பதற்கான வரம்பை ரூ 1,00,000 ஆக உயர்த்த தற்போது கருதப் படுகிறதுஇதனால் சுமார் 20,000 வணிகர்கள் பயனடைவர் என்று எதிர் பார்க்கப்படுகிறது. இதனால் ரூ 3கோடி அளவில் வருவாய் இழப்பு ஏற்படும்

ரூ 30,000-க்குக் குறையாத மொத்தவிற்பனைத் தொகையைக் கொண்ட பொது விற்பனைச் சட்டத்தின் கீழ்ப்பதிவுசெய்து கொள்ள வேண்டுமென்று தற்போது வகை செய்யப் பட்டுள்ளது. இந்த மொத்த விற்பனைத் தொகையை ரூ 50,000 ஆக உயர்த்தத் தற்போது கருதப்பட்டுள்ளது.

கையினால் தயாரிக்கப் படும் விளையாட்டுப் பொருட்கள், கலைப் பொருட்கள்ஆகியவற்றின் மாநிலங்களுக்கிடையிலான விற்பனை மீது விதிக்கப் படும்வரியைப் பொருத்த வரையில் 4 சதவிகித சலுகை வீதத்தை இத்தகைய பொருள்களுக்கும் நீட்டிக்க முடிவு செய்யப் பட்டுள்ளது

கோழித் தீவனம், கால் நடை கலவைத் தீவனம் ஆகியவற்றின் மீது, தற்போது 5 சதவித பலமுனை விற்பனை வரி விதிக்கப் படுகிறது,

இதனை மாற்றி இப் பொருள்கள் மீது 5 சதவித ஒருமுனை விற்பனை வரியை விதிக்க தற்போது கருதப்பட்டுள்ளது. இதனால் ரூ.25 லட்சம் வரையில் வருவாய் இழப்பு ஏற்படும் என்று எதிர்பார்க்கப் படுகிறது.

கனரக மோட்டார் வண்டிகளின் அடிச் சட்டங்கள் மீது அண்டை மாநிலங்களான புதுச்சேரி கருநாடகம் ஆகிய மாநிலங்களில் விற்பனை வரி குறைக்கப் பட்டுள்ளதால் இத்தகைய கனரக மோட்டார் வண்டிகளின் அடிச்சட்டங்கள் மீதான விற்பனை வரி வீதத்தை, இத்தகைய அடிச்சட்டங்கள் ஒப்படை விற்பனை அடிப்படையில் விற்கப் படுவதைத் தடுக்கும் பொருட்டு 9 சதவிதத்திலிருந்து 6 சதவிதமாகக் குறைக்கக் கருதப்பட்டுள் ளது.

மேற்குறிப்பிட்ட வரிச் சலுகைகளினால் ரூ 3.25 கோடி அளவிற்கு வருவாய் இழப்பு ஏற்படும் என்று மதிப்பிடப்படுகிறது.

எனவேதற்போது வரி விதிப்புநடவடிக்கைகளின் மூலம்கூடுதலாக கிடைக்க கூடிய நிகர வருவாய் ரூ. 54 கோடியாக இருக்கும் என்று எதிர்பார்க்கப்படு கிறது.

## பற்றாக்குறை குறையும்

இத்தகைய நடவடிக்கைகளின் பலனாக அடுத்த ஆண்டுக்கான வரவு-செலவுத் திட்டப் பற்றாக்குறை ரூ 1,47.50 கோடியாகக் குறையும்.

முதலமைச்சர் குழந்தைகள் சத்துணவுத் திட்டத்தின்பலனாக எல்லாவகையிலும் சிறார்களுக்கு ஏற்பட்டுள்ளநன்மைபற்றி நான் எடுத்து விளக்கி உள்ளேன். சிறுவர்கள் தங்களது வாழ்க்கையின் முக்கியமான பருவத்தில் பட்டினிக் கொடுமையிலிருந்து காப்பாற்றப்பட வேண்டும் என்பது முதல்வரின் உன்னதமான நோக்கமாகும்.

## சத்துணவு விஸ்தரிப்பு

அப்போதுதான் அவர்கள் கல்வி பயில்வதற்கு ஏற்ற சூழ்நிலை உருவாகும். எனவே, நடப்பாண்டில் அறிஞர் அண்ணா பிறந்த நாளாகிய செப்டம்பர் 15ம் நாளிலிருந்து குழந்தைகள் சத்துணவு திட்டத்தை இம்மாநிலத்திலுள்ள எல்லாப் பள்ளிகளிலும் 10 - 15 வயது வரையுள்ள மாணவர்களுக்கு நீட்டிக்க அரசு முடிவு செய்திருப்பதை பெருமகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

இத்தகையை சத்துணவு அவர்களுக்கு ஆண்டில் பள்ளி நாட்கள் அனைத்திலும் கிடைக்கும். சத்துணவுத் திட்டத்தை இவ்வாறு நீட்டித்த பிறகு தமிழ் நாட்டிலுள்ள சிறுவர்களும் சிறுமியர்களும் பள்ளி செல்லத் தொடங்கும்நிலைக்குமுன்பிலிருந்து பள்ளி கல்வியை முடிக்கும் நிலை வரை இததிட்டத்தின் பயனை அவர்கள் பெறுவர்

இத்திட்டம் நம்மாநிலத்தின் மனித வளத்தில் செய்யப்படும் கணிசமான முதலீடாகும். இத் திட்டத்தினால் வரும் ஆண்டில் ரூ 20 கோடி அளவிற்குக் கூடுதல் செலவு பார்க்கப்படுகிறது.

இச்செலவுப் பொறுப்பையும் கணக்கில் கொண்டால், ஆண்டு இறுதியில் நிகரப் பற்றாக்குறை ரூ 167.50 கோடியாக இருக்கும்.

பொருளாதாரத்தின் பல்வேறு வளர்ச்சித் துறைகளில் எதிர்பார்க்கப்படுகிறமேம்பாடும், திட்டம் சாராச் செலவினங்களில் கண்டிப்பானச் சிக்கன முறைகளைக் கடைப்பிடிப்பதன் மூலம் கிடைக்கக் கூடிய சேமிப்பும் இப்பற்றாக்குறையைசரிக்கட்ட நமக்கு உதவியாக இருக்கும் என நாம் நம்புகிறோம்.

இயற்கை சீற்றங்களினால் நடப்பாண்டில் நமது மாநிலத்திற்கு ஏற்பட்டுள்ள இடர்ப்பாட்டை இந்திய அரசு நன்கு புரிந்து கொண்டு நமக்குப் பெருமளவுசகு உதவி செய்யும் என்று நாம் எதிர்பார்க்கிறோம்.

இவ்வாறு நிதியமைச்சர் டாக்டர் நாவலர் கூறினார்.

## பாதுகாப்பு திட்டம்...

முதல் பக்கத் தொடர்ச்சி

தொழிலாளர்களுக்காகவும், சிறு உழவர்கள், சொற்ப நிலமுள்ள உழவர்கள் போன்ற நலிந்த பிரிவினர்களுக்காகவும், தொழிலாளர் நலத்துறையில் ஒரு தனிப் பிரிவு ஏற்படுத்தப்படும் அதில் ஒவ்வொரு விவசாயத் தொழிலாளரும் சிறு உழவர்களும் முதலில் உறுப்பினர்களாகச் சேர்த்து கொள்ளப்படுவார்கள்.

மாவட்ட ஆட்சித் தலைவரின்நேரடிப்பார்வையின் கீழ் ஆங்காங்கே உட்பிரிவுகள் நிறுவப்படும்.

வெள்ளம், வறட்சி போன்றவைகளால் ஏற்படும் இழப்பை உறுப்பினர்களுக்கு ஈடு கட்டிப் பாதுகாப்பு கொடுப்பதோடு மட்டுமல்லாமல் தொழில் செய்யும் போது ஏற்படும் உயிர் இழப்பிற்கு குடும்ப நிலைக்கு ஏற்ப குறைந்தது ரூ.5,000முதல் ரூ.10,000 வரைஉதவி அளிக்கப்படும்.

உறுப்பினர் ஆகும் நபர்களை ஆயுள் காப்பீட்டுக் கழகத்தில் தமிழக அரசே பதிவு செய்ய ஏற்பாடு செய்து அதற்குத் தேவையான சந்தா தொகையில் ஒரு பங்கை அரசே ஏற்கு மென்றும் கூற விரும்புகிறேன்.

ஆகவே எதிர்பாராத இழப்புக்கள் நேரிடும் போது இவர்களுக்கு காப்புறுதி கழகத்தின் மூலமாகவும் எந்த அளவிற்கு சட்டப்படி முடியுமோ அந்த அளவுக்கு அரசின் நேரடி ஈடுபாட்டின் மூலமாகவும் தேவைகளை அனுசரித்து உதவி செய்ய அரசு ஏற்பாடு செய்திருக்கிறது,

இச்சிறப்புத் திட்டத்திற்காக முதலமைச்சரின் பொது நிவாரண நிதியிலிருந்து ரூபாய் 5 கோடி ஒதுக்கப்படும்.

## வாக்குறுதி நிறைவேற்றம்

தேர்தல் அறிக்கையில் பயிர்ப் பாதுகாப்பை இவ்வரசு மேற்கொள்ளுமென்று வாக்குறுதிஅளித்தோம் அந்தத் திட்டம் நடைமுறைப் படுத்தப்பட்டுள்ளது.

இப்போது தேர்தலில் சொல்லாத ஆனால் மிகவும் அவசியமான, உழைக்கும் உழவர்களின் உயிர், உடைமைகளுக்குப் பாதுகாப்புத் தரும் வகையில், இததிட்டத்தை இந்த ஆண்டு நடைமுறைப் படுத்த இருக்கிறோம்.

தொடர்ந்து நடைபோட்டுச் செல்லும் அரிமா, ஒரிடத்தில் நின்று தான் ஏறுநடைப்போட்டு வந்த தொலைவைத் திரும்பிப் பார்த்து, தான் செல்ல வேண்டிய தொலைவை ஏறெடுத்துப் பார்க்குமாம்.

அதுபோலஇந்தநிதிநிலை அறிக்கை சென்ற கால நிகழ்வுகளை சுட்டிக்காட்டும் பணியையும் எதிர் கால நிகழ்வுகளைப் பற்றி எடுத்துக்கூறும் பணியையும் செய்கின்றது.

தமிழகம் எல்லா வகைகளிலும் செழித்து ஓங்க வேணடும். தமிழ் மக்கள் எல்லா வழிகளிலும் சிறப்புற்றுத் திகழ வேண்டும் என்பதை எண்ணத்தில் கொண்டு இதுகாறும்மேற் கொண்ட நற்பணிகள



சென்னை வள்ளுவர் கோட்டத்தில் அன்னை தெரசாவுக்கு வரவேற்பு விழா நடந்தது. முதல்வர் புரட்சித்தலைவர் மத்திய அமைச்சர் விஜயபாஸகர ரெட்டி ஆகியோர் பங்கேற்றனா.

### 1984- 85-ம் ஆண்டு

## தமிழக பட்ஜெட் கண்ணோட்டம்

மொத்த வரவு: ரூ 2757. 68 கோடி

மொத்த செலவு: ரூ 2959. 18 கோடி

பற்றாக்குறை ரூ. 201. 5 கோடி

### 4-வது ஊதிய ஆணைக்குழு ஜூன் 1-ந் தேதி முதல் செயல்படும்

## ஓய்வு பெறும் அரசு ஊழியர் ரூ30 ஆயிரம் வரை பெறுவர்

சென்னை, மார்ச். 3— தமிழக சட்டசபையில் நிதியமைச்சர் டாக்டர் நாவலரால் தாக்கல் செய்யப்பட்ட 84-85ம் ஆண்டுக்கான நிதிநிலை அறிக்கையில் தெரிவிக்கப்பட்டுள்ளதாவது:-

அரசு மேற்கொண்ட பல்வேறு பணியாளர் நல நடவடிக்கைகள் பற்றி ஏற்கெனவே ஆளுநர் உரையில் கூறப்பட்டுள்ளது ஒய்வுகாலப் பயனை உயர்த்துவது பணியாளர்களின் நீண்டகாலக் கோரிக்கைகளில் ஒன்றாகும் அரசுப் பணியாளர் ஒவ்வொரு வரும் திங்கள் ஒன்றுக்கு ரூ. 20 என்ற வீதத்தில், அத்தொகை கூட்டு வட்டியுடன் ரூ.5,000ஆகச் சேருகிற வரையில் செலுத்த வேண்டுமென்றும், பணியாளர் ஒய்வு பெறும் பொழுது அவர்கள் செலுத்தியுள்ள தொகையுடன் அரசு ரூ. 5,000 கொடுக்கும் என்றும் இதற்காக வகை செய்யும் திட்டம் ஒன்று, 1984 ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 1ஆம் நாள் முதற் கொண்டுசெயலுக்குவரும் என்றும் அரசு அறிவித்துள்ளது.

இத்திட்டத்தின் கீழ் அரசுப் பணியாளர் திங்கள் ஒன்றுக்கு செலுத்தும் ரூ. 20 அதற்கான வட்டிக் தொகையுடன் ரூ. 5,000 சேரும் வரையில் தொடர்ந்து செலுத்தப் பட வேண்டும்

இத்தொகை சேர்ந்தவுடன் பணியாளர்கள் தொகைசெலுத்தவேண்டியதில்லை இக்கணக்கின்படி பார்த்தால் சுமார் ரூ 3,000 க்குத்தான்எந்த அரசு ஊழியரும் இத்திட்டத்தில் முதலீடு செய்ய நேரிடும்.

வருங்கால வைப்புநிதிக்குக் கொடுக்கப்படும் அதே கூட்டு வட்டிக்குச் சமமாக இத்தொகைக்கும் வட்டி கொடுக்கப்படும்.

அரசுப் பணியாளர் இயல்பாப ஒய்வு பெறுகையில் அரசு கொடுக்கும் ரூ.5,000 இத்தொகையுடன் சேர்த்துக் கொடுக்கப்படும். இவ்வாறாக, 1984 ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 1 ஆம் நாளுக்குப் பின்னர், அரசுப் பணியாளர்கள் இயல்பாக ஒய்வு பெறுகையில் நிர்ணயித்த ரூ 5 000மும், அவர்கள் செலுத்திய தொகையையும், அதற்குரிய கூட்டு வட்டியுடன் சேர்த்துப் பெறுவர்.

அரசுப் பணியாளர்கள் செலுத்தும் தொகை அதற்குரியகூட்டு வட்டியுடன் ரூ. 5000ஆக சேரும் நாளும், அவர்கள் பணியிலிருந்து இயல்பாக ஒய்வு பெறும் நாளும் ஒன்றாக இருக்கும் நேர்வில் அவர்கள் ரூ.,10000 பெறுவர். அந்த நாளுக்குப் பின்னர் ஒய்வு பெறுபவர்கள் அதற்கேற்ப அதிகமான தொகை பெறுவர்.

## 4-வது ஊதிய ஆணைக் குழு

புதிதாகப் பணியில் சேரும் ஒருவர் அவர் எத்தனை ஆண்டுகள் பணியாற்றியுள்ளவரோ அதை பொறுத்து அத்தொகை ரூ 30,000க்கும் மேற்படலாம்.

அரசு பணியாளர்களின் பிரதிநிதிகளை கலந்தாலோசித்து வகுக்கப்பட்ட இத்திட்டம் அரசு பணியாளர்கள் அனைவரின் ஒருமித்தபாராட்டுதலைப் பெற்றுள்ளது.

## முன்னாள் நீதிபதி

ஆளுநர் உரையில் அறிவிக்கப்பட்டிருந்ததற்கு இணங்க நான்காவது ஊதிய ஆணைக்குழு (சம்பலகமிஷன்)சென்னை உயர்நீதிமன்றத்தின் முன்னாள் நீதிபதிஒருவர் தலைமையில் ஒருநபர் குழுவாக 1984ஆம் ஆண்டு ஜூன் திங்கள் 1ஆம் நாள் அன்றிலிருந்து செயல்படத் தொடங்கும் பொறுப் பேற்கும் நீதிபதியின் பெயர் பின்னர் அறிவிக்கப்படும்.

இவ்வாறு நிதி நிலை அறிக்கையில் தெரிவிக்கப்

ஆண்டில் மேற்கொள்ளப்பட்டிருக்கும் சீரிய பணிகள் பற்றியும் ஓரளவுக்குக் கோடிட்டுக் காட்டப்பட்டுள்ளது.

இவ்வாறு நிதியமைச்சர் டாக்டர் நாவலர் தாக்கல் செய்த அறிக்கையில் தெரி

### பொதுச் செயலாளர்

## ப. உ. ச. கடிதம்

### நாளை இடம் பெறும்

### பெரிய நாயக்கன் பாளையத்தில் நடந்த மாபெரும் கழக பொதுக் கூட்டத்தில்

### கொள்கை பரப்புச் செயலளார்

## செல்வி ஜெயலலிதா

### ஆற்றிய உரை நாளை வெளிவரும்

தலைமைக் கழகஅறிக்கை எண் 48 84

### தருமபுரி மாவட்டம் பர்கூர் ஒன்றிய கழகத்தோழர்களுக்கு

தர்மபுரி மாவட்டம் பர்கூர் ஒன்றியம் பெருகோபணபள்ளி கிளைக்கு முறைப்படிதேர்ந்தெடுக்கப் பட்ட

அவைத்தலைவர்
திரு பி. வி. அங்கப்பன்

செயலாளர்
திரு. பி. சி எஸ். கேசவன்

துணைச்செயலாளர்
திரு கே சுப்பிரமணி

பொருளாளர்
திரு. எம். ஜி. முனுசாமி

ஆகியோர் கொண்ட கழக அமைப்பே தொடர்ந்து செயல்பட்டு வருகின்றது.

இவர்கள் அல்லாது வேறு யாராவது புதிய அமைப்பு என்று செயல்பட்டால் அவர்கள் மீது தகுந்த நடவடிக்கை எடுக்கப்படும் என அறிவிக்கப் படுகிறது.

கழக நிறுவனத்தலைவர் மாண்புமிகு புரட்சித்தலைவர் அவர்களின் ஒப்புதலுடனும் பொதுச்செயலாளர் திருமிகு ப. உ. ச. அவர்களின் அனுமதியுடனும் இவ்வறிவிப்புவெளியிடப்படுகிறது.

என். ராசாங்கம்
அமைப்புச்செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்

சென்னை·14
3-3-84

தலைமைக்கழக அறிக்கை எண்49·84

### சேலம் மாவட்ட கழகத்தோழர்களுக்கு

கழகவிதிமுறைகளுக்கு மாறாகநடந்துகழகத்தின் நற்பெயருக்கு களங்கம் விளைவிக்கும் வகையில் செயல்பட்ட காரணத்தால் சேலம் மாவட்டத்தைச் சேர்ந்த

எம். பி துரைசாமி
சேலம் மாவட்ட எம்.ஜி.ஆர். மன்றசெயலாளர்

ராஜா
பொதுக்குழு உறுப்பினர்

சொக்கலிங்கம்
பொதுக்குழு உறுப்பினர்

கே. ஏ. தேவராசன்
சங்ககிரி ஒன்றிய செயலாளர்

பி. அம்மாசி
வாழையாடி ஒன்றிய செயலாளர்

கே. ராமச்சந்திரன்
காடையாம்பட்டி ஒன்றிய செயலாளர்

க. அருணாசலம்
மகுடம்சாவடி ஒன்றிய செயலாளர்

பாலு என்ற பாலசுப்பிரமணியன்
திருச்செங்கோடு ஒன்றிய செயலாளர்

முருகேசன்
அயோத்தியாபட்டினம் பேரூராட்சி செயலாளர்

ஜம்பு
சேலம் வார்டு செயலாளர்

ஆதவன் இளங்கோ
சேலம் வார்டு செயலாளர்

ராஜமாணிக்கம்
சேலம் வார்டு செயலாளர்

அன்வர்பாஷா
சேலம் நகரம்

ராமராஜ்
சூரமங்கலம் வார்டு செயலாளர்

லட்சுமணன்
ராசிபுரம் நகரம்

மணிக்குமார்
கழக பேச்சாளர்

உரைமுரசுயூசுப்
கழக பேச்சாளர்

எம் எஸ் ரகமான்
முன்னாள் துணை அமைப்பாளர்

ஆகியோர் இன்று முதல் கழகத்தின் சாதாரண உறுப்பினர் பொறுப்பு உட்பட அனைத்துப்பொறுப்புகளிலிருந்தும் நீக்கப்படுகிறார்கள்.

கழக-சார்புமன்றத்தோழர்கள்யாரும்அவர்களுடன் எந்தவிதத் தொடர்பும் வைத்துக் கொள்ள வேண்டாம் என்று கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

கழக நிறுவனத்தலைவர் மாண்புமிகு புரட்சித் தலைவர் அவர்களின் ஒப்புதலுடனும் பொதுச் செயலாளர் திருமிகு ப.உ.ச. அவர்களின் அனுமதியுடனும் இவ்வறிவிப்பு வெளியிடப்படுகிறது.

என். ராசாங்கம்
அமைப்புச்செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம்

சென்னை-14
3-3-84